REGISTERED No. M. 1500

# நவசக்தி

NAVASAKTI

(தமிழ் வாரப் பதிப்பு)

வெள்ளிக்கிழமை தோறும் வெளிவருவது.

| சந்தா விவரம். | | |
|---|---|---|
| வருட சந்தா | ரூ. | 5 0 |
| ஆறுமாத சந்தா | ,, | 3 0 |
| மூன்றுமாத சந்தா | ,, | 1 8 |
| வெளி நாடு-வருட சந்தா | ,, | 6 0 |

"வீடு பெற நில்"

"மாற்றானுக் கிடங்கொடேல்"

விளம்பர விகிதம்.
கலம் 1-க்கு வாரம் 1-க்கு ரூ. 7 0
சில்லரை விளம்பரம்-1 அங். 0 6
நீண்டகாலம் விளம்பரஞ் செய்வோர் நேரே எங்கட்கு எழுதவும்.

"ஏற்பதிகழ்ச்சி"

சிலம்பு 2. துன்மதி௵ கார்த்திகைμ௴ உசவ (9—12—21) பரல் 7

## பண்டை இந்தியாவில் கப்பற் போக்கு வரவு

இந்தியாவின் இயற்கை அமைப்பே அதன் பெருமைக்குக் காரணம். உலகத்திலுள்ள பிறநாடுகளுடன் சம்பந்தம் வைத்துக் கொள்ளாத நிலையில், உலகத்திலே நிகழும் மாறுதல்கள் அதன் மாசற்ற வாழ்க்கையைப் பங்கப்படுத்தாத தன்மையில் இந்தியா அமைந்திருந்தது; இருக்கிறது. இந்தியாவின் சரித்திரத்தை யறியாத ஒருவன் அதன் பூகோள சாஸ்திரத்தைமட்டும் எடுத்துப் படிப்பானேயாகில், இந்தியா தன் நாகரிகத்தைப் பிறருக்குக் கட்டுப்படாமல், தானும் பிறரைக் கட்டுப்படுத்தாமல் வளர்த்துக் கொண்டிருக்க வேண்டும் என்று ஊகிப்பான். ஆனால் இந்தியாவின் சரித்திரம் வேறு விதமாகவே இருக்கிறது. இந்தியாவின் நாகரிகத்திற்குப்பல தேசங்கள் கட்டுப்பட்டன என்பதை எந்தச் சரித்திரக்காரரும் அங்கீகரித்துக்கொள்வர்.

* * *

இந்தியாவில் கப்பற்றொழிலானது மிக நன்றாகப் பண்பட்டிருந்த தொன்றே, அது பல நாடுகளுடன் போக்குவரவு செய்து கொண்டிருந்தது என்பதைக் காட்டுகிறது. குறைந்த அளவாகப் பார்த்த போதிலும் சுமார் இருபத்தாறு நூற்றாண்டுகளுக்கு முற்பட்ட கால முதற்கொண்டே இந்தியா, வியாபார உலகத்தின் இருதய ஸ்தானமாக இருந்தது என்று கூற வேண்டும். பண்டைக் காலத்தில் பொனிஷியர், யூதர், அஸ்ஸிரியர், கிரேக்கர், எகிப்தியர், ரோமர் ஆகிய இவரோடும் பிற்காலத்தில் துருக்கியர், வெனீஷியர், போர்த்துகேசியர், டச்சுக்காரர், ஆங்கிலேயர் ஆகிய இவரோடும் இந்தியர் வியாபாரம் செய்து வந்தனர். இந்தியாவின் செழுமையும் அதன் மிதமான சீதோஷ்ண நிலையும் எவரும்பாராட்டுந் தன்மையனவாயிருந்தன. இவைகளுடன் இந்தியர் சுறுசுறுப்புள்ளவராகவும் உழைப்பாளிகளாகவும் இருந்தனர். எனவே, அவர், தங்கள் தினசரி வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்களை அயல்நாட்டாரிடமிருந்து எதிர் பார்க்கவில்லை. இதனால் இந்தியாவின் ஏற்றுமதி வியாபாரம் அதிகமாகவும் இறக்குமதி வியாபாரம் குறைந்ததாகவும் இருந்ததென்றே கூறலாம். தகரம், ஈயம், கண்ணாடிச் சாமான்கள், ஆயுதங்களுக்குவேண்டிய எஃகு முதலிய சிலவே ஐரோப்பாவி லிருந்தும் மேற்கு ஆசியாவிலிருந்தும் இந்தியாவுக்கு இறக்குமதியாயின. ஆனால் இந்தியர்கள் பெரும்பாலும் ஆன்ம சக்திபெற்று உலக வாழ்க்கையை நடத்தி வந்தார்களாதலின் மேற்கூறப்பட்ட ஆயுதசாமான்கள் மிகக் குறைவாகவே இறக்குமதியாயிருக்கவேண்டும். சாம்பிராணி அரேபியாவிலிருந்து இந்தியாவுக்கு இறக்குமதியாகிக்கொண்டுவந்தது. இந்தியாவிலிருந்துமேனாடுகளுக்கு ஏற்றுமதியான சாமான்களோ எண்ணிறந்தன. ஆட்டு உரோமம், கோமேதகம், பச்சை, வைடூரியம் முதலிய உயர்ந்த இரத்தினங்கள், குங்கிலிய சம்பந்தமான பசை, மெல்லிய உரோமத்தாலாய தோல்கள், பெருங்காயம், கஸ்தூரி முதலிய பல மேனாடுகளுக்கு ஏற்றுமதியாகிக்கொண்டிருந்தன. உயர்ந்த கம்பளங்களும் உரோமத்தால் செய்யப்பட்ட பல வேலைப்பாடான உடைகளும்இந்தியாவினின்று மேனாடுகளால் எதிர்பார்க்கப்பட்டன. பாபிலோனிலும் ரோமாபுரியிலுமிருந்த உயர்ந்த குடும்பத்தினர் இந்தியாவிலிருந்து வந்த கம்பளங்களை வாங்கி உபயோகப்படுத்துவதில் அதிக ஆசைகொண்டிருந்தனர். இவைகள் அந்நகரங்களில் அதிக விலை கொடுத்து வாங்கப்பட்டன. இந்தியாவிலிருந்து ஏற்றுமதிசெய்யப்பட்ட சாமான்களில் முக்கியமானது பட்டேயாகும். அயல்நாட்டார் சமஎடைபட்டைச் சம எடை பொன் கொடுத்து வாங்கிக்கொண்டனர் என்று சொல்லப்படுகிறது. பட்டுக்கு அடுத்தபடியாக இந்தியாவிலிருந்து அதிகமாக ஏற்றுமதி செய்யப்பட்டவை பஞ்சுத் துணிகளேயாகும். மிகவும் கீழ்த்தரமான துணிகள்முதல் உயர்ந்த மஸ்லீன் துணிகள்வரை யாவற்றிற்கும் இந்தியாவையே மேனாடுகள் எதிர்பார்த்திருந்தன. மற்றும் பலவிதமான எண்ணெய்கள், பித்தளைச் சாமான்கள், உப்பு, மருந்துகள், சாயச் சாமான்கள், வாசனைத் திரவியங்கள், மிளகு முதலிய யாவும் இந்தியாவிலிருந்தே ஐரோப்பாவுக்கு ஏற்றுமதியாயின.

* * *

இதனால் பல நூற்றாண்டுகளாக மேனாடுகளுக்கு வேண்டிய சாமான்களை இந்தியா உதவி வந்தது என்பது நன்கு புலனாகும். இந்தியாவினின்றும் பிறநாடுகளால் வேண்டப்பட்டவை அதிகமென்றும், பிறநாடுகளினின்றும் இந்தியாவால் வேண்டப்பட்டவை குறைவென்றும் முன்னரே கூறப்பட்டுள்ளமையால், பிறநாடுகளிலிருந்து இந்தியாவுக்கு ஏராளமான பணம் வந்து குவிந்தது என்பது கூறாமலே விளங்கும். ரோமாபுரி வாசிகள் மட்டும் வருஷத்துக்கு *ஆயிரக் கணக்கான பவுன் பெறுமான சமான்களை இந்தியாவினின்றும் இறக்குமதி செய்து கொண்டனர் என்று கூறி இங்ஙனம் ஆண்டு தோறும் ஆயிரக் கணக்கான பணம் ரோமாபுரியிலிருந்து செல்கின்றதே யென்று கி. பி. முதல் நூற்றாண்டிலேயே பிளினி என்ற ஆசிரியன் விசனப்பட்டு எழுதியிருக்கிறான். இங்ஙனம் இந்தியாவின் வியாபாரம் மிகச் செழித்திருந்தமையால் அதன் பணச் செல்வாக்கும் அதிகமாயிருந்தது. கி. மு. ஐந்தாம் நூற்றாண்டிலேயே,—அதாவது பிளினி என்பவன் விசனப்பட்டு எழுதின ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்னரே—பாரசீக தேசத் தரசனான தேரியஸ் என்பவனுக்குட்பட்டிருந்த இந்தியச் சிற்றரசரில் ஒருவன் நூற்றெண்பத்தைந்து அந்தர் வெயிட் எடையுள்ள பொன்னை அப்பாரசீக அரசனுக்குக் காணிக்கையாகச் செலுத்தினான் என்றால் இந்தியாவின் செல்வ நிலை நன்கு விளங்கும்.

* * *

இந்தியாவின் கடல் வியாபாரம் அல்லது கப்பல் போக்குவரவு எப்பொழுது முதல் தொடங்கியது என்பதைப் பற்றிய ஆராய்ச்சி அதிகமாக விரியும். ருக்வேத காலத்திலேயே இந்தியாவின் அந்நிய நாட்டு வியாபாரம் மிகவும் உயரிய நிலையிலிருந்ததென்று கூறவேண்டும். ருக்வேதத்தின் காலத்தைப் பற்றிய வாதம் ஈண்டு வேண்டுவதில்லை. ஆனால் ருக்வேத காலம் என்பது மிகவும் பழைமையான காலம் என்பதை எவரும் மறுக்கமாட்டார். எனவே கி. மு. மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரேயே இந்தியா, அந்நியநாடுகளுடன் போக்குவரவு செய்து கொண்டிருந்தது என்று சில சரித்திரக்காரர் கூறுகின்றனர். டாக்டர் சேய்ஸ் என்னும் அறிஞர் கி. மு. மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரேயே இந்தியாவுக்கும் பாபிலோனுக்கும் வியாபாரப் போக்கு வரவு நடைபெற்றுக் கொண்டிருந்தது என்று குறிப்பிடுகிறார். ஐக்கிய பாபிலோனியாவின் முதல் அரசனான உர்பாகஸ் என்பவன் உர் என்னும் பிரதேசத்தில் ஆண்டு கொண்டிருந்தபோதே இந்தியாவுக்கும் பாபிலோனுக்கும் வியாபாரம் நடை பெற்றிருக்க வேண்டுமென்றும் உர் என்னும் பிரதேசத்தில் பிற்காலத்தில் அகப்பட்ட தேக்கு மரங்கள் மலையாளத்திலிருந்து ஏற்றுமதியாயிருக்க வேண்டுமென்றும் ஹ்யூவிட் என்னும் சரித்திரக்காரர் நிச்சயித்திருக்கின்றனர். மற்றும் பாபிலோனியாவில் அகப்பட்ட ஒரு புராதன சாஸனத்தில் மஸ்லின் துணிக்கு 'சிந்து' என்று கூறப்பட்டிருக்கிறது. இதனால் சிந்து நதி பிரதேசத்திற்கும் பாபிலோனுக்கும் வியாபாரப் போக்கு வரவு இருந்ததென்பது வெள்ளிடை மலையென்று டாக்டர் சேய்ஸ் குறிப்பிடுகிறார். டாக்டர் சேய்ஸின் அபிப்பிராயத்தை வேறு சில சரித்திரக்காரர் மறுத்து, அவ்வளவு புராதனகால முதற்கொண்டு இந்தியாவுக்கு அந்நிய வியாபாரம் இருந்ததென்பதற்கு எவ்வித சாஸன ஆதாரமும் இருப்பதாகத் தெரியவில்லை என்று கூறியிருக்கின்றனர். இவருடைய கூற்றே சரியானதென்று வைத்துக்கொண்டாலும், கி. பி. ஏழாம் நூற்றாண்டு முதல் இந்தியாவுக்கு அந்நிய நாட்டு வியாபாரம் இருந்ததென்பது புலனாகும், எனவே இற்றைக்குக் குறைந்தது சுமார் இரண்டாயிரத்தைந்நூறு ஆண்டுகளுக்கு முன்னரே இந்தியாவின் அந்நிய நாட்டு வியாபாரம் நன்னிலையி லிருந்ததென்று கூறலாம். இதே காலத்திலும் இதற்கு முன்னரும் கிரீஸ், ரோமாபுரி, அஸ்ஸிரியா, எகிப்து முதலிய முன்னர்க் கூறப்பட்ட தேசங்களுக்கும் இந்தியாவுக்கும் போக்கு வரவு இருந்தது.

* இதில் அபிப்பிராய பேதமிருக்கிறது. ஸ்ரீமான் ராதா குமுதமுகர்ஜி எழுபதினாயிரம் பவுன் என்று கூறுகிறார். ஸ்ரீமான் கிருஷ்ணசாமி ஐயங்கார் 4,86,979 பவுன் என்று கூறுகிறார்.

* * *

இந்தியாவுக்கும் பிறநாடுகளுக்கும் வியாபாரப் போக்குவரவு இருந்தமையால் இந்தியருக்கும் பிற நாட்டவருக்கும் அந்நியோந்நிய பாவம் அதிகமாக இருந்தது. சாலோமன் என்னும் அரசன் கீழ்நாட்டிலிருந்து வரும் வியாபாரிகளின் சௌகரியத்திற்காகத் தரை மார்க்கத்திலும் கப்பல் மார்க்கத்திலும் பல ஏற்பாடுகளைச் செய்து வைத்திருந்தான். தரை மார்க்கத்தில் வியாபாரிகள் தங்கிப் போவதற்காக அங்கங்கு சத்திரங்கள் ஏற்படுத்தி வைத்திருந்தான். இந்தியா, அந்நிய நாடுகளுடன் வியாபாரம் செய்து வந்தது என்பதற்குக் கிரேக்க நூல்களிலும் அநேக ஆதாரங்கள் இருக்கின்றன. இந்தியாவைப் பற்றி அறிந்தவர்களுள் முதன்மை யானவனான ஹெரோதத்தன் (கி. மு. 450) என்பவன் பாரசீக அரசர்களுடைய சேனையில் இந்திய வீரர்கள் இருந்ததாகக் கூறுகிறான். மற்றும் அவன் விலையுயர்ந்த இரத்தினங்களும் காய்களும் இந்தியாவிலிருந்து பாபிலோனியாவுக்குச் சென்றன என்றும், இந்தியாவில் ஏராளமாகப் பொன் கிடைக்கிறதென்றும் குறிப்பிடுகிறான்.

* * *

இதுகாறும் இந்தியாவுக்கும் பிறநாடுகளுக்கும் வியாபாரப் போக்கு வரவு இருந்தது என்பதைப் பற்றிச் சுருக்கிக் குறிப்பிட்டோம். இனி, இப்போக்கு வரவுக்குச் சாதனமாயிருந்த கப்பல்களைப் பற்றியும் அவைகளின் அமைப்பைப் பற்றியும் சிறிது கூறுவோம். இந்தியாவில் கப்பல் கட்டுந் தொழிலானது மிகவும் புராதனமானது. கப்பல் கட்டுந் தொழிலைக் கொண்டே ஜீவனஞ் செய்து வந்தோர் எண்ணிறந்தவர். அந்தத் தொழில் இப்பொழுது இந்தியாவில் எந்நிலையிலிருக்கிறது என்பதைப் பற்றிக் கூறவேண்டுவதில்லை. அரசர்கள் பிரயாண காலத்தில் கப்பல்களை உபயோகித்தார்கள் என்பதற்கு ருக்வேதத்தில் பல ஆதாரங்கள் காணப்படுகின்றன. கப்பல் கட்டுந் தொழிலைப் பற்றித் தனி நூல்கள் பல இருந்தன. முற்காலத்தில் இந்தியாவில் வழங்கப்பட்ட விருக்ஷ ஆயுர்வேதத்தின் (பாடனி) படி மரங்கள் நான்கு வகையாகப் பிரிக்கப்பட்டிருந்தன. முதலாவதாகிய பிராமண ஜாதி மரமானது இலேசாயும் மிருதுவாயும் எந்த மரத்தோடும் இணைக்கக்கூடியதாயுமிருந்தது; இரண்டாவதாகிய க்ஷத்திரிய ஜாதி மரமானது இலேசாயும் மிருதுவாயும் ஆனால் வேறெந்த மரத்தோடும் இணைக்கக் கூடாததாயுமிருந்தது; மூன்றாவதாகிய வைசிய ஜாதி மரமானது மிருதுவாயும் ஆனால் பளுவாயும் இருந்தது; நான்காவதாகிய சூத்ர ஜாதி மரமானது மிருதுத் தன்மை இல்லாததாயும் பளுவாயும் இருந்தது. இவைகளில் க்ஷத்திரிய ஜாதியைச் சேர்ந்த மரங்களால் செய்யப்பட்ட கப்பலே வியாபாரத்திற்கு ஏற்றதென்றும் இக்கப்பல்களே நீண்ட தூரங்களுக்குச் செல்லத் தகுதியானவை யென்றும் இக்கப்பல்களைக் கொண்டு வியாபாரம்செய்தால் அதிக செல்வம் உண்டாகும் என்றும் கூறப்பட்டிருக்கின்றன. மேலே கூறப்பட்ட மரங்களுள் ஒரு ஜாதி மரத்தை மற்றொரு ஜாதி மரத்தோடு இணைத்துக் கப்பல் செய்தால், அது நீண்ட நாள் நிலைத்திராதென்றும், சிறிது ஆபத்து நேரிடினும் திடீரென்று முழுகிப் போகும் என்றும் சொல்லப்படுகின்றன. கப்பல்கட்டும் விஷயத்தில் மற்றோர் எச்சரிக்கை செய்யப்படுகிறது. ஆழமான சமுத்திரங்களில் செல்லும் கப்பல்களின் அடிப்பாகத்தில் பலகைகளை ஒன்றோடொன்று சேர்க்கும் விஷயத்திலாவது வேறெவ்விஷயத்திலாவது இரும்பை உபயோகிக்கக் கூடாதென்றும், சமுத்திரங்களில் மின்சார சக்தியுடைய பாறைகள் பல இருக்கின்றனவாதலின் அவைகளால் இழுக்கப்பட்டு முழுகிப் போகாமலிருக்கவே இந்த எச்சரிக்கை செய்யப்படுகிறதென்றும் கப்பல் சாஸ்திர நிபுணன் ஒருவன் கூறியிருக்கிறான். இதனால் பண்டை இந்தியர்களுடைய அறிவின் பெருமை புலனாகும்.

* * *

'யுக்திகல்பதரு' என்னும் ஒரு வடமொழி நூலின்படி கப்பல்கள் 'சாமான்யம்' என்றும் 'விசேஷம்' என்றும் இரண்டு விதமாக வகுக்கப்பட்டிருந்தன. ஆறுகளிலும் சிறிய நீரோட்டங்களிலும் செல்லக் கூடியவைகளுக்கு 'சாமான்ய'க் கப்பல்கள் என்றும் சமுத்திரங்களில் செல்லக்கூடியவைகளுக்கு 'விசேஷ'க் கப்பல்கள் என்றும் பெயரிடப்பட்டிருந்தன. 'சாமான்ய' கப்பல்களில் பத்து விதம் இருந்தன. அவைகளின் நீளம், அகலம், உயரம், பேர் முதலியன வருமாறு:—

### 1. சாமான்ய கப்பல்கள்

| பெயர் | முழ நீளம் | முழ அகலம் | முழ உயரம் |
|---|---|---|---|
| 1. க்ஷுத்ரம் | 16 | 4 | 4 |
| 2. மத்திமம் | 24 | 12 | 8 |
| 3. பீமம் | 40 | 20 | 10 |
| 4. சபலம் | 48 | 24 | 24 |
| 5. பதலம் | 64 | 32 | 32 |
| 6. பயம் | 72 | 36 | 36 |
| 7. தீர்க்கம் | 88 | 44 | 44 |
| 8. பத்ரபுதம் | 96 | 48 | 48 |
| 9. கர்ப்பரம் | 112 | 56 | 56 |
| 10. மந்தரம் | 120 | 60 | 60 |

இந்தப் பத்துவித கப்பல்களில் பீமம், பயம், கர்ப்பம் என்ற மூன்று கப்பல்களில் பிரயாணம் செய்தால் துரதிர்ஷ்டமே சம்பவிக்குமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

* * *

சமுத்திரங்களில் செல்லக்கூடிய 'விசேஷ'க் கப்பல்களில் 'தீர்க்க' கப்பல்கள் என்றும் 'உன்னத'க் கப்பல்கள் என்றும் இரண்டு பிரிவுகள் உண்டு. அதாவது அகலத்தையும் உயரத்தையும் விட நீளத்தில் மிகுந்தவை 'தீர்க்க'மென்றும் நீளத்தையும் அகலத்தையும் விட உயரத்தில் மிகுந்தவை 'உன்னதம்' என்றும் அழைக்கப்பட்டன. 'தீர்க்க' கப்பல்களில் பத்து வகையும் 'உன்னத' கப்பல்களில் ஐந்து வகையும் உண்டு. அவை வருமாறு:—

### 2. விசேஷக் கப்பல்கள்

#### 1. தீர்க்ககப்பல்கள்

| பெயர் | முழ நீளம் | முழ அகலம் | முழ உயரம் |
|---|---|---|---|
| 1. தீர்க்கிகம் | 32 | 4 | 3 1/5 |
| 2. தரணி | 48 | 6 | 4 4/5 |
| 3. லோலம் | 64 | 8 | 6 2/5 |
| 4. கத்வரம் | 80 | 10 | 8 |
| 5. காமினி | 96 | 12 | 9 2/5 |
| 6. தரி | 112 | 14 | 11 1/5 |
| 7. ஜங்காலம் | 128 | 16 | 12 4/5 |
| 8. ப்ளாவினி | 144 | 18 | 14 2/5 |
| 9. தாரிணி | 160 | 20 | 16 |
| 10. வேகினி | 176 | 22 | 17 3/5 |

இவைகளில் லோலம், காமினி, ப்ளாவினி என்ற மூன்று கப்பல்களும் துரதிர்ஷ்டத்தைக் கொடுப்பனவாகும்.

#### 2. உன்னதகப்பல்கள்

| பெயர் | முழ நீளம் | முழ அகலம் | முழ உயரம் |
|---|---|---|---|
| 1. ஊர்த்வம் | 32 | 16 | 16 |
| 2. அனூர்த்வம் | 48 | 24 | 24 |
| 3. ஸ்வர்ணமுகி | 64 | 32 | 32 |
| 4. கர்ப்பிணி | 80 | 40 | 40 |
| 5. மந்தரம் | 96 | 48 | 48 |

இவைகளில் அனூர்த்வம், கர்ப்பிணி, மந்தரம் ஆகிய மூன்று கப்பல்களில் பிரயாணம் செய்தால் துரதிர்ஷ்டம் உண்டாகும். ஊர்த்வத்தில் பிரயாணம் செய்யும் அரசர்களுக்கு அதிக இன்பம் உண்டாகும்.

இன்னும் மேற்காணப்பட்ட 'யுக்திகல்பதரு' என்னும் நூலில் கப்பல்களை எங்ஙனம் அலங்கரிக்கலாமென்பதைப் பற்றியும் எங்ஙனம் பிரயாணம் செய்வோருக்குச் சௌகரியமுண்டாகும் வண்ணம் கப்பல்களை அமைக்கலாமென்பதைப் பற்றியும் விளங்க உரைக்கப்பட்டிருக்கிறது. கப்பல்களை அலங்கரிப்பதற்குப் பொன், வெள்ளி, செம்பு ஆகிய மூன்றும் தனித்தனியாகவும் சேர்ந்தும் உபயோகிக்கப்படலா மென்று சொல்லப்பட்டிருக்கிறது. கப்பல்களுக்கு அவைகளுக்குள்ள பாய் மரங்களுக்குத் தகுந்தாற்போல் வர்ணங்கள் பூசப்பட வேண்டுமென்று விதிக்கப்பட்டிருந்தது. நான்கு பாய் மரங்களோடு கூடிய கப்பல்கள் வெண்மையாகவும், மூன்று பாய் மரங்களோடு கூடிய கப்பல்கள் சிவப்பாகவும் இரண்டு பாய் மரங்களோடு கூடிய கப்பல்கள் மஞ்சள் நிறமாகவும் ஒரு பாய் மரத்தோடு கூடிய கப்பல்கள் ஊதா நிறமாகவும் காணப்பட வேண்டும். கப்பல்களின் முன்பாகமானது பலவித உருவங்களைக் கொண்டிருந்தது. சிங்கம், யானை, புலி, சர்ப்பம், வாத்து, கிளி, மனிதன் இவைகளின் தலைகளைப் போன்ற உருவங்கள் கப்பலின் முன்பாகமாக அமைக்கப்பட்டிருந்தன. இதனால் அக்காலத்தில் சித்திரத் தொழில் எவ்வளவு அழகாகப் பண்பட்டிருந்தது என்பது நன்கு விளங்கும்.

* * *

பிரயாணிகளுக்குச் சௌகரிய மாயுள்ள அறைகளைக் கொண்டும் கப்பல்கள் மூன்று விதமாக வகுக்கப்பட்டிருந்தன. கப்பலின் ஒரு முனையிலிருந்து மற்றொரு முனை வரை அறையாகவே (காபின்) அமைக்கப்பட்டிருந்தவைகளுக்கு 'சர்ப்ப மந்திர கப்பல்கள்' என்று பெயர். இக்கப்பல்கள் அரசனுடைய பொக்கிஷமும் குதிரைகளும் பெண்டிரும் செல்வதற்கு உபயோகிக்கப்பட்டன. நடுப்பாகத்தில் மட்டும் அறையைக் கொண்டவைகளுக்கு 'மத்திய மந்திர கப்பல்கள்' என்று பெயர். அரசர்கள், பொழுதுபோக்குக்காக எங்கேனும் பிரயாணம் செய்தால் இக்கப்பல்களையே உபயோகித்தார்கள். மேலும் இக்கப்பல்கள் மழை காலத்தில் பிரயாணம் செய்வதற்குச் சௌகரியமாயிருந்தன. முற்பாகத்தில் மட்டும் அறைகளைக் கொண்டவைகளுக்கு 'அக்ர மந்திர கப்பல்கள்' என்று பெயர். இவை, கோடை காலத்துப் பிரயாணத்துக்குப் பெரிதும் உபயோகப்படுத்தப்பட்டன. கடல் யுத்தத்திற்கு இக்கப்பல்களே உபயோகிக்கப்பட்டன என்று சொல்லப்படுகிறது. இக்கப்பலிலேயே, பாண்டவர்கள் விதுரனுடைய ஆலோசனையைக் கேட்டு துரியோதனாதியர்களால் நிருமாணிக்கப்பட்டிருந்த பொய் வீட்டினின்றும் தப்பிச் சென்றார்கள் என்று அறிஞரிற் சிலர் அபிப்பிராயப்படுகின்றனர்.

* * *

முற்காலத்திருந்த கப்பல்கள் எழுநூறு பேர் எண்ணூறு பேரையும் சுமந்து செல்லக் கூடியனவாகக் கட்டப்பட்டிருந்தன. விஜயன் என்பவன் சிங்களத்வீபத்திற்கு வங்காளத்தினின்றும் வந்தபோது அவன் கப்பலில் எழுநூறு பேர் கூட வந்தனர் என்று சொல்லப்படுகிறது. சிம்ஹளன் என்னும் அரச குமாரன் ஜம்புத்வீபத்தினின்றும் இலங்கைக்குச் சென்றபோது அவனுடைய கப்பலில் ஐந்நூறுவியாபாரிகள் சென்றார்கள் என்று சொல்லப்படுகிறது. இங்ஙனம் பல உதாரணங்கள் எடுத்துக் காட்டலாம். இதுகாறும் கூறியவாற்றான் பண்டைக்காலத்தில் கப்பல் பிரயாணம் சர்வ சாதாரணமாயிருந்தது என்பதும் கப்பல்கள் மிக்க நுண்ணிய அறிவுடன் அமைக்கப்பட்டு உபயோகப் படுத்தப்பட்டன என்பதும் நன்குவிளங்கும்.

* * *

மௌரியர்களுடைய ஆட்சியில் கப்பல் போக்குவரவினால் அரசாங்கத்தாருக்கு நல்ல வரும்படி இருந்து வந்தது. கப்பற்படை நிருவாகத்திற்கென்றே தனி உத்தியோகஸ்தர்கள் இருந்தார்கள். கப்பல் போக்குவரவைக் கவனித்து சுங்கம் வாங்கவும் சுங்கம் தவிர்க்கவும் இன்னும் கப்பல் போக்குவரவு சம்பந்தமான வேலைகளைச் செய்யவும் தனியான ஓர் அதிகாரி நியமிக்கப்பட்டிருந்தான். இப்பொழுதுள்ள துறைமுக அதிகாரியின் நிலையில் மேலே கூறப்பட்ட பழைய அதிகாரி இருந்தான் என்று கூறலாம். காற்றினாலாவது மழையினாலாவது சேதப்பட்டு வந்த கப்பல்களை இந்தக் கப்பல் அதிகாரி கருணையுடன் கவனித்து அவைகளுக்கு வேண்டுவன செய்து வந்தான். கப்பல்களினின்றும் இறக்குமதி செய்யப்பட்ட சாமான்களில் எவையேனும் பழுதாகப் போய்விட்டாலும் காணமற் போய்விட்டாலும் அதற்கு அரசாங்கத்தாரே, அச்சாமான்களுக்குப் பொறுப்பாளியானவனுக்கு நஷ்டஈடு கொடுத்து வந்தனர். கப்பல்கள் பிரயாணமாவதற்கு முன்னர், அவைகளைச் சரியாகப் பழுதுபார்த்தும். பிரயாண காலத்தில் கப்பல்களில் உள்ளவர்களுக்கு எவ்வித இடையூறும் நேரிடாமல் இருக்கும் வண்ணம் மேற் பார்வை பார்த்தும் அனுப்ப வேண்டியது கப்பல் அதிகாரியின் கடமையாயிருந்தது. அதிக மழைபெய்த காரணத்தினால் கப்பல்கள் செல்லும் வழிகளில் ஏதேனும் இடையூறு சம்பவிக்கும் என்று தோன்றினால் கப்பல்களைச் செல்லவொட்டாமல் நிறுத்தி வைக்கக் கப்பல் அதிகாரி உரிமை பெற்றிருந்தான். இன்னின்னவரைக் கப்பலில் ஏற்றலாமென்றும், இன்னாரை ஏற்றக்கூடாதென்றும் விதிகள் இருந்தன. கப்பல்களில் அரசாங்கக் காவலரால் சந்தேகிக்கப்பட்டவர்களாவது, வேறுவித குற்றத்தைச் செய்தவர்களாவது ஏறினாலும் அல்லது அவைகளினின்று இறங்கினாலும் அவர்களைக் கப்பல் அதிகாரி சிறை செய்து தண்டனைக்குட்படுத்தி வந்தான். இங்ஙனம் கப்பல் அதிகாரி அநுசரிக்க வேண்டிய விதிகள் பல இருந்தன. அவைகளை அர்த்த சாஸ்திரம் என்னும் வடமொழி நூலில் பரக்கக்காணலாம். இந்த அர்த்த சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ள விதிகள் யாவும் சந்திரகுப்தன் ஆட்சியில் அநுஷ்டானத்தில் இருந்தன. சந்திரகுப்தனுடைய காலத்தில் கப்பற்படையைக் கவனிப்பதற்கென்று தனியான ஒரு குழுவே நியமிக்கப்பட்டிருந்தது. இக்குழுவில் ஐவர் அங்கத்தினரா யிருந்தனர். இதனால் இற்றைக்குச் சுமார் இரண்டாயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர் கப்பல் வியாபாரமும், கப்பற்படையும், கப்பற் போக்குவரவும் எங்ஙனம் பண்பட்ட நிலையிலிருந்தது என்பது நன்கு புலனாகும். அத்தகைய வியாபாரம், அத்தகையபடை, அத்தகைய போக்குவரவு இப்பொழுது எங்கே போயின? உலகத்தினர்க்குக் கப்பல் மூலமாகச் சென்று அறிவையும் நாகரிகப் பொருள்களையும் நூற்றாண்டுகள் கணக்காக வழங்கி வந்த நாம் இப்பொழுது ஒரு குண்டூசி முதல் அந்நிய நாடுகளையே எதிர் பார்த்த வண்ணம் இருக்கிறோம். நமது கப்பற் கட்டும் தொழில் மாண்டது; கலன்களைச் செலுத்தி வந்த திறல் வீழ்ந்தது; கப்பல்களினின்றும் போர்கொடுத்து அந்நியர்களை அடக்கி வைத்திருந்த நமது ஆண்டகைமை அடியோடு பட்டது. நாம் பண்டை இந்தியர்களாவது எந்நாள்? பண்டைக்காலத்தைப்போல் உலக மனத்திலும் கப்பல்களைச் செலுத்தி வியாபார ஆட்சி செலுத்துவதெந்நாள்?

* * *

இந்தச் சிறு கட்டுரையில், தமிழ்நாட்டில் நடைபெற்ற கப்பல் வியாபாரத்தைப் பற்றியாவது, கப்பற்றொழிலைப் பற்றியாவது ஒன்றும் குறிப்பிடவில்லை. அதைப் பற்றித் தனியான ஒரு விரிவுரை எழுத வேண்டுமென்பது என் நோக்கமாதலின், அதனைப் பற்றி ஒரு மொழியும் கூறாது விடுத்திருக்கிறேன். தமிழ் நூல்களை ஆராய்ச்சி செய்யப்புகின் தமிழ் நாட்டில் கலஞ்செலுத்தி வாணிபம் செய்து வந்த பெருமை பலதிறப்பட்டனவாகக்காணப்படும் என்பதில் என்ன ஐயமிருக்கிறது?

'சரித்திரக்காரன்.'

## ஆதி திராவிடர்களுக்கு ஒரு வேண்டுகோள்

ஆதி திராவிட சகோதரர்களே! கல்வியிலும், தெய்வபக்தியிலும், போர்த்தொழிலிலும், கொல்லா விரதத்திலும், ஆசாரத்திலும் முன்னேற்றமடைந்திருந்த நாம், இப்போது எல்லாவற்றிலும் குன்றி அந்தகாரத்தில் மூழ்கியிருப்பதைப் பார்க்க யார் மனது தான் சகிக்கும்? இப்போது நம் குலத்துக்கே ஒரு புதிய உணர்ச்சி தோன்றியிருக்கிறது. அவ்வுணர்ச்சி இன்னும் சில ஆண்டுகளுக்குள் பலவூர்களிலும் தோன்றி நர்த்தனம் புரியுமென்பதற்கு ஐயமில்லை. ஆனால் சொற்ப ஜனத்தொகையுடைய நாம் ஆதி திராவிடர், திராவிடர் என்ற இரு வகுப்புகளை யேற்படுத்திக் கொண்டிருப்பது பொருந்தாது. அவ்விரு வகுப்புக்குள் ஒருவித கட்டுப்பாடின்றி சகல வித சம்பந்தங்களும், பந்திபோஜனமும் தாளாரமாகச் செய்து வருகிறோம். ஆதி திராவிடர் என்றழைக்கும் சகோதரர்கள் திராவிட குலத்தில் உதித்தவர்களே. தமிழ் ஜில்லாக்களிலுள்ள நம் திராவிட சகோதரர்களைப் பஞ்சமன், பறையன், தீண்டாதவன், வலங்கை முகத்தான், ஆதி திராவிடன் என்னும் அநேக பட்டப் பெயரிட்டழைப்பதை இன்றைக்குங்காணலாம். ஆதி திராவிடர் என்ற மொழியைப் பற்றிச் சரித்திர ஆதாரங்களைக் கொண்டு பார்க்கும்போது அம்மொழி பண்டைத் தமிழ் நூல்களில் இல்லவேயில்லை. தமிழர், திராவிடர் என்ற சொல்லே உளது. ஆனதால் ஆதி திராவிட சகோதரர்களே! நமக்கு ஆதியும் வேண்டாம்; அநாதியும் வேண்டாம். திராவிடர் என்னும் பட்டத்தைத் தரித்து வெளிக்கிளம்பினால் தான் தீண்டப்படாமை யென்னும் தொத்து வியாதி நம் பாரத தேசத்தை விட்டு நீங்கும். தற்காலம் நம் சகோதரர்களிற் பலர் தாங்கள் ஜீவனோபாயத்திற்காகக் கூலி வேலை, கைத்தொழில், வியாபாரம், உத்தியோகம் முதலிய துறைகளில் சம்பந்தப்பட்டிருந்த போதிலும், சிற்சிலர் நம் குலத்திற்கே அடாத இழி தொழிலாகிய கோமாமிஸம் விற்று வருகிறார்கள். அத்தகாத தொழிலைச் செய்வதைவிட உத்தமமான கைராட்டினம் வைத்து நூல் நூற்பது எவ்வளவோ மேன்மையானது. இனியேனும், எல்லா வகுப்பார்களாலும் வெறுக்கப்பட்ட அத்தொழிலை அறவே நீக்கி சுய நன்மையைக் கருதாமலும் தம் புத்திக்கு மற்றவர் ஈடல்ல வென்றும், கட்சிப் பிரதிகள் ஏற்படுத்தி நம்மை அல்லலுக்கிழுத்து அலைய விடாமலும், ஏழைகளின் மேம்பாட்டுக்கும் உழைக்கும் உத்தமபுருஷர்களின்சொல்கேட்டு நடவுங்கள்.

ரா. க. லிங்கம்.

## ஸ்ரீமான் தாஸின் கடிதங்கள்

### காங்கிரஸ் ஊழியர்களுக்கு

ஆமதாபாத்தில் நடைபெற விருக்கும் இந்திய தேசீய மகாநாட்டிற்குத் தலைமை வகிக்கத் தெரிந்தெடுக்கப் பட்டிருக்கும் ஸ்ரீமான் சி. ர. தாஸ் காங்கிரஸ் ஊழியர்களுக்கு ஒரு கடிதம் விடுத்துள்ளார். அதன் சாராம்சம் வருமாறு:—

பலாத்காரமற்ற ஒத்துழையா இயக்கத்தின் கொள்கையினின்றும் எக்காலத்திலும் பிறழாமல் இருக்கவேண்டு மென்பதே என் வேண்டுகோள். அப்படிப் பிறழாமல் இருப்பதும் கஷ்டமான காரியந்தான். சில சமயங்களில் அளவுக்கு மீறி கோப மூட்டப்பட்டால் மனம் வாக்குச் செய்கைகளால் பலாத்காரமற்ற கொள்கையை அநுஷ்டித்துக் கொண்டிருப்பது கஷ்டமான காரியம் என்பதை நான் அறிவேன். ஆயினும், நமது இயக்கம் முழு பலாத்கார மின்மையைக் கொண்டே வெற்றியடைய வேண்டியதாயிருக்கிறது. ஆகையால் தேச ஊழியர்கள் அனைவரும் அதிகமாகக் கோப மூட்டப்பட்டாலும் அதைப் பொறுத்துக்கொண்டிருக்கும்படியான சக்தியைப் பெறவேண்டும். எப்போதும் குற்றத்தை மற்றவர்கள் மீது போட்டு விடுவது இயற்கை. உதாரணமாக ஓர் ஊரில் குழப்பம் ஏற்பட்டால், துஷ்டர்களைக் கிளப்பி விட்டு விட்டதால் அவர்கள் குழப்பத்தை யுண்டாக்கினார்களென்று சொல்வது வழக்கம். நம்மால் துஷ்டர்களென்று கருதப்படுபவர்களும் நம்முடைய தேசத்து மக்களேயாவர் என்பதை நாம் மறந்து விடக்கூடாது. ஒத்துழையாக்காரர்கள் தங்களுக்குத் தேச முழுமையிலும் செல்வாக்கு இருப்பதாகச் சொல்லிக் கொள்கிறார்கள் என்பதை நாம் மறந்து விடக்கூடாது. நம் நாட்டிலுள்ளவர்கள் துஷ்டர்களாயினுஞ் சரி, சாத்வீகர்களாயினுஞ் சரி, அவர்களை நம் வழிக்குத் திருப்பாதவரை நாம் நம் முயற்சியில் அவர்களிடையில் தவறிவிட்டவர்களாவோம். பொறுப்புகள் யாவும் நம்முடையன ஆகும். துஷ்டர்கள் சாதாரண ஜனங்களைச் சட்டங்களை மீறி நடக்கும்படியாய்த் தூண்டி விட்டார்களென்று நாம் சொல்லக்கூடாது. பொது ஜனங்களை நம் வழிக்குத் திருப்பிக்கொண்டு வராமல் நாம் வெற்றி யடைந்துவிட்டோம் என்று எப்படி சொல்லிக்கொள்ள முடியும்? ஆனால் எனக்கு அதைரியம் ஒன்றும் ஏற்படவில்லை. பலாத்கார மற்ற ஒத்துழையா இயக்கத்தில் நீங்கள் செவ்வையாய் நடந்து கொள்வதற்குரிய பலத்தைக் கடவுள் உங்களுக்குக் கொடுக்க வேண்டுமென்று நான் கடவுளைப் பிரார்த்திக்கிறேன்.

### வங்காள வாசிகளுக்கு

ஸ்ரீமான் சி. ர. தாஸ் வங்காள வாசிகளுக்கு ஒரு கடிதம் விடுத்திருக்கிறார். அதன் சாராம்சத்தை ஈண்டு வெளியிடுகிறோம்:—

நம்முடைய கடமை யாதென்பது தெளிவாய் இருக்கிறது. நம்முடைய முக்கிய நோக்கம் சுயராஜ்யம் அடைவதே யாகுமென்று இந்திய தேசீய மகாநாடு பிரஸ்தாபித்திருக்கிறது. சுயராஜ்யத்தை அடைவதற்கு வழி ஒத்துழையா இயக்கம் ஆகுமென்று இந்திய தேசீய மகாநாடு தீர்மானித்திருக்கிறது. அதிகாரவர்க்கத்தினர் என்ன செய்தாலும் வங்காள தேசிய வாதிகள் தங்களுடைய கடமை யாதென்பதை மறந்துவிட மாட்டார்கள். தற்போது வங்காள வாசிகள் சோதனையில் ஈடுபட்டிருக்கிறார்கள். வெற்றி பெறுவதும், தோல்வி யுறுவதும் அவர்களையே பொறுத்திருக்கிறது. தேசத்து மக்கள் அனைவரும் சாந்தமாய் இருக்கவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன். எல்லாக் கஷ்டங்களையும் சந்தோஷத்துடன் பொறுத்துக்கொள்ள வேண்டுமென்று நான் என் தேசத்து மக்களைக் கேட்டுக்கொள்கிறேன். தேசத்து மக்கள் இந்திய தேசீய மகாநாடு விடுத்த கட்டளைகளினின்று பிறழக் கூடாதென்று நான் கூறுகிறேன். காங்கிரஸ் வேலை இச்சா சேவகர்களால் தான் செய்யப்பட வேண்டும். காங்கிரஸுக்காக வேலை செய்கிறவர்கள் ஒவ்வொருவரும் அவர்கள் ஆணாயிருந்தாலுஞ் சரி, பெண்ணாயிருந்தாலுஞ் சரி, வயோதிகராய் இருந்தாலும் சரி, பாலியர்களாயிருந்தாலுஞ் சரி, இச்சா சேவகர்கள் ஆவர். காங்கிரஸில் வேலை செய்வதற்காக நான் இச்சா சேவகனாய்ச் சேர்ந்து கொள்ள இஷ்டப்படுகிறேன். மாகாணத்தில் காங்கிரஸ் வேலை செய்வதற்காக இன்னுஞ் சில தினங்களில் லட்சக் கணக்கான இச்சா சேவகர்கள் முன்வர வேண்டுமென்று நான் பிரார்த்திக்கிறேன். நாம் எடுத்துக்கொண்ட முயற்சி தூய்மையானது. நம்முடையநோக்கத்தை நிறைவேற்றிக்கொள்வதற்காக நாம் சாந்தமான நிலைமையையும் பலாத்காரமின்மையையும் அநுஷ்டிக்கிறோம். நாம் தேசத்திற்காகச் செய்யும் வேலை -கடவுளுக்குச் செய்யும் வேலையாகு மென்று உணரவேண்டாமா? கடவுளின் வேலையை எந்த அரசாங்க அறிக்கைகளும் தடுக்க முடியாது.

## அதிகாரவர்க்க ஆட்சிமுறை

### பலம் இழந்து வருகிறது

ஸ்ரீமான் சி. ர. தாஸ் டிசம்பர் 6-ந் தேதியிட்டு எழுதுவதன் சாராம்சம் வருமாறு:-

நமக்கு ஜனங்களிடை அதிகமான செல்வாக்கு இருக்கிறதென்று சொல்லிக்கொள்கிறோம். அதைப் போலவே காங்கிரஸுக்கு அம்மாதிரியாகச் சொல்லிக்கொள்ளும் உரிமை யிருக்கிறதா என்பதைப் பற்றி நிர்ணயிக்க வேண்டுமென்று நான் கூறுகிறேன். இத்தேசத்தில் எங்கு பலாத்காரமான செயல்கள் ஏற்பட்டாலும் அவைகளுக்குரிய பொறுப்பை நாம் ஏற்றுக்கொள்ளவேண்டும். காங்கிரஸின் தர்மம் பரவாத இடத்தில் நடைபெறும் பலாத்காரமான செயல்களுக்கு ஒத்துழையாக்காரர்கள் பொறுப்பாளிகள் ஆகமாட்டார்கள். மலபாரில் நடைபெறும் குழப்பங்களின் பொறுப்பு நம்மைப் பொறுத்தல்ல. ஒத்துழையாக்காரர்கள், தங்கள் தர்மத்தை அவ்விடத்தில் பரப்ப விடப்பட்டிருந்தால் மலபாரில் இப்போது ஏற்பட்டிருக்கும்படியான சம்பவம் நடைபெற்றே இராது. பம்பாயில் சமீபத்தில் நடைபெற்ற குழப்பங்களைப்பற்றியும் மற்ற இடங்களில் நடைபெற்ற சம்பவங்கள் விஷயமாகவும் காங்கிரஸின் நிலைமை வேறுவிதமானது. நம்முடைய பொறுப்பு யாதென்பதை ஆராய்வோம். பலாத்கார மற்ற ஒத்துழையா இயக்கம் வெற்றி யுற்றதென்று நாம் கூறுகிறோமா? ஒத்துழையா இயக்கம் வெற்றி யுற்றிருந்தால் அது காங்கிரஸுக்கு ஜனங்களிடை அதிகமான செல்வாக்கு இருக்கிறதென்பதை ருஜுப்பிக்கவில்லையா? ஜனங்களிடை காங்கிரஸுக்குச்செல்வாக்கு ஏற்பட்டால் தான் பலாத்காரமற்ற ஒத்துழையா இயக்கம் வெற்றியடைந்து விட்டது என்று சொல்லமுடியும். ஜனங்களிடையில் நமக்குச் செல்வாக்கு இருந்து கொண்டே வந்தால், அது நம்முடைய வெற்றியின் அளவைக் காண்பிக்கும். ஜனங்களிடை செல்வாக்கு அற்று விட்டால் அது நம்தோல்வியைக்காட்டும். அதிகார வர்க்கத்தினரையும் நாம் இதைக் கொண்டே நிர்ணயிக்க வேண்டும். அதிகாரவர்க்கத்தினர் ஜனங்கள் தங்கள் பக்கம் இருப்பதாகக் கூறிக்கொள்கின்றனர். அதிகார வர்க்கத்தினர் ஜனங்களை மிருக பலத்தின் உதவியால் அடக்கி வைத்துக் கொண்டிருக்கும்வரைநான் அவர்கள் கூற்றுக்கு இடங் கொடுக்க மாட்டேன். அதிகார வர்க்கத்தினர் தங்களுடைய செல்வாக்கு முரட்டு பலத்தையே அடிப்படையாகக் கொண்டிருக்கிறதென்று கூறினால் நான் அதிகார வர்க்கமே இல்லை யென்று கூறி விடுவேன். மகாத்மாகாந்தி பொறுப்பைஏற்றுக்கொள்வதினின்று அதிகாரவர்க்கத்தினர் ஒத்துழையா இயக்கம் தோற்றுப்போய் விட்டதென்று கூறிவிடுகின்றனர். மகாத்மா காந்தி எப்போதும் பாதி உண்மைகளையும் பொய்யானவைகளையும் சொல்வதேயில்லை. இந்திய தேசீய மகாநாடு தன் ஆதிக்கத்தை இழந்தால் அதை ஒப்புக்கொள்ளும். அதே மாதிரியாக ஒப்புக்கொண்டிருக்கிறது. பம்பாயிலும் இதர பாகங்களிலும் ஏற்பட்ட குழப்பங்களின் பயனாய் அதிகார வர்க்கத்தினரும் தங்கள் ஆதிக்கத்தை அப்பாகங்களில்இழந்துவிட்டவர்களாகிறார்கள். ஆகையால் காங்கிரஸ் அதிகாரத்தை இழந்து விட்டது என்று சொல்வதைக்காட்டிலும் அதிகாரவர்க்கத்தினரே தங்கள் ஆதிக்கத்தை இழந்து விட்டார்களென்று கூறவேண்டும். ஜனங்களிடை நமக்குச் செல்வாக்கு இருப்பதற்காகவே நாம் சுய ராஜ்ஜியத்திற்காகப் போராடுகிறோம். இந்தியாவுக்குத் தற்போது இன்னார் தான் அதிகாரிகளாயிருக்கிறார்களென்று சொல்வதற்கில்லை. இந்திய தேசீய மகாநாடு தேசம் தன் பக்கத்தில் இருப்பதாகக் கூறுகிறது. அதிகாரவர்க்கத்தினர் தேசம் தங்கள் சார்பில் இருப்பதாகக்கூறுகின்றனர். நாம்சொல்வது சரியா? அதிகார வர்க்கத்தினர் சொல்வது சரியா? நடைபெறும் சம்பவங்களே இதை ருஜுப்பிக்க வேண்டும்.



## அகில இந்திய தொழிலாளர் மகாநாடு

### நிறைவேறிய தீர்மானங்கள்

சென்றவாரம் இறுதியில் ஜாரியாவில் கூடிய அகில இந்திய தொழிலாளர் மகாநாட்டில் கீழ்வரும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

#### சுயராஜ்யம்

இந்தியர்கள் சுயராஜ்யத்தை அடைவதற்குரிய காலத்தைப் பெற்றுவிட்டார்களென்று இவ்வகில இந்திய தொழிலாளர் மகாநாடு தீர்மானிக்கிறது.

இத் தீர்மானத்தைப் பிரரேபித்து ஸ்ரீமான் ஜாமன்லால் வெகு உருக்கமாகப் பேசினார்கள்.

இத்தீர்மானத்தை ஆதரித்து ஸ்ரீமான்கள் இ. எல். ஐயர், ஜே. பி. மில்லர், ஜகத்நாராயண்லால், ஸ்ரீமதி பிரபாவதி ஆகிய இவர்கள் பேசினார்கள்.

#### சுதேசிய அபிவிருத்தி

இந்தியத் தொழிலாளர்கள் சுதேசியத்தை ஆதரிக்க வேண்டுமென்றும் தொழிலாளர்கள் கைத்தறி நெசவுத் தொழிலையும், நூல் நூற்றல் தொழிலையும் ஆதரிக்க வேண்டுமென்றும் இம்மகா நாட்டார் தீர்மானிக்கின்றனர் என்ற தீர்மானத்தை ஸ்ரீமதி சாவித்திரி தேவி பிரரேபித்துப் பேசினார். இத்தீர்மானம் ஆதரிக்கப்பட்ட பின்னர் ஏகமனதாய் நிறைவேற்றப்பட்டது.

#### தொழிலாளர் நிலை

பீஹார், வங்காளம் ஆகிய இவ்விடங்களிலுள்ள சுரங்கத் தொழிலாளர்களின் நிலைமை மிகக்கேவலமாயிருக்கிறது. அந்நிலைமையை மாற்றுவதற்காகக் கீழ்க்கூறும் நிவர்த்தி முறைகள் செய்யப்பட வேண்டும்.

வேலை நேரத்தைக் குறைக்கவேண்டும். கூலி விகிதங்கள் உயர்த்தப்படவேண்டும். கல்வி நலன்கள் செய்து கொடுக்கப்பட வேண்டும். காயமடைந்தவர்களுக்கு நஷ்டஈடு கொடுக்கப்படவேண்டும். இவைகளை எல்லாம் நிறைவேற்றுவதற்காக நிர்வாகக்கமிட்டியார் சுரங்கச்சொந்தக்காரர்களுடனும் மானேஜர்களுடனும் கலந்து பேச வேண்டும். இத்தீர்மானத்தைசுவாமி தரிசனாநந்தர் பிரரேபிக்க, சுவாமி விஸ்வாநந்தர் ஆதரித்தார்.

சுரங்கச் சொந்தக்காரர்களின் பிரதிநிதியும் சட்டசபை அங்கத்தினருமான ஸ்ரீமான் ஜே. எச். பாட்டின்சன் இத்தீர்மானத்தை முதலாளிகளின் சார்பாக ஆதரித்துப் பேசினார்.

#### முதலாளிகளின் செயல் கண்டிக்கப்பட்டது

இந்தியச் சுரங்க முதலாளிகள் சங்கத்தார் நடந்து கொண்ட மாதிரியையும் இந்தியச் சுரங்கச் சங்கத்தார், வர்த்தகச் சங்கத்தார் ஆகிய இவர்கள் நடந்துகொண்ட மாதிரியையும் கண்டிப்பதல்லாமல், அம்மாதிரியான செயல் முதலாளிகளுக்கும் தொழிலாளிகளுக்கும் பரஸ்பரமான நேசபாவத்தை யுண்டாக்காமல், குரோதத்தையே யுண்டாக்குமென்று இச்சங்கத்தார் அன்னாருக்குத் தந்தி மூலமாய் அறிவித்துக்கொள்கின்றனர் என்ற தீர்மானம் ஏகமனதாய் நிறைவேற்றப்பட்டது.

#### சென்னை மில்விஷயம்

(1) சென்னை அரசாங்கத்தார் வெளிப்படையாக பக்கிங்ஹாம்-கர்னாடிக் மில் சொந்தக்காரர்களுடன் கலந்துகொண்டு வேலை நிறுத்தத்தை ஒழிப்பதற்காகக் கூலிகளைச் சேர்த்ததை இம்மகாநாட்டார் கண்டிப்பதல்லாமல், தொழிற் கமிஷனர் பதவியை எடுத்துவிட வேண்டுமென்றும் இம்மகாநாட்டார் தீர்மானிக்கின்றனர். (2) ஜாம்ஷட்பூர் தொழிலாளர் சங்கத்தார் இம் மகாநாட்டிற்குத் தெரிந்தெடுத்த பிரதிநிதிகளைத் தாதா கம்பெனியார் அனுப்ப மறுத்ததை இம் மகாநாட்டார் கண்டிக்கின்றனர். (3)நிலக்கரியின் மேல் ஏற்படுத்தப்பட்டிருக்கும் தடையை எடுத்துவிட வேண்டும் என்று தீர்மானிக்கின்றனர். (4) குமாஸ்தாக்களின் பரிதாப நிலைமையைக் கண்டு இம்மகாநாட்டார் வருத்த மெய்துகின்றனர்.

அக்கிராசனரால் பிரரேபிக்கப்பட்டு நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களின் விவரம் வருமாறு:—

1. தேசத்துக்கு வேண்டிய உணவுப் பொருள்கள் வேண்டிய அளவுக்குக்கிடைக்கும் வரை, அவைகளை வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யக்கூடாது. 2. ருஷ்யாவில் இலட்சக்கணக்காய் வாடும் ஜனங்களுக்கு உலகத்திலுள்ள தொழிலாளர் அனைவரும் உதவி புரியவேண்டும். 3. கிரேட் பிரிட்டன், பிஜி, ஐர்லாந்து ஆகிய இவ்விடங்களிலுள்ள தொழிலாளர்களுக்கு அநுதாபம் காட்டப்படுகிறது. 4. கட்டாய வேலை முறையையும் ஒப்பந்தக் கூலிமுறையையும் ஒழித்துவிடவேண்டும். 5. சென்னைத் தபால்காரர்கள் விஷயத்திலும் கான்பூர் தொழிலாளர்கள் விஷயத்திலும்இம்மகாநாடுஅநுதாபம்காட்டுகிறது 6. மூல்ஷிபேட்டை சத்தியாக்கிரகிகள் விஷயம் சம்பந்தமாக பம்பாய் கவர்ன்மெண்டாரும் தாத கம்பெனியாரும் நடந்து கொண்ட மாதிரியை இம்மகாநாடு கண்டிக்கிறது.

அக்கிராசனர் முடிவுரை கூறிய பின்னர் மகாநாடு முடிவடைந்தது.

## மலபார் விஷயம்

### மாப்பிள்ளைக் கைதிகளின் கோர மரணம்

### வைத்திய உத்தியோகஸ்தரின் அபிப்பிராயம்

#### ரெயில்வே உத்தியோகஸ்தரின் அடாத செயல்

மாப்பிள்ளைக் கைதிகளின் கோரமரணத்தைப் பற்றிய விசாரணையின்போது ஸ்ரீமான் ஓ'கானர் என்ற வைத்திய உத்தியோகஸ்தர் மாப்பிள்ளைகள் மூச்சுத் திணறியே மாண்டனரென்றும்1711-ம் நெம்பர் வண்டியில் மானிடர்களை ஏற்றிச் செல்வதே கூடாத காரியமாகுமென்றும் கைதிகளின் உடம்பில் காயங்கள் ஒன்றையும் பார்க்கவில்லையென்றும் சொல்லி முடித்தார்.

போதனூர் ஜங்ஷனில் விசாரணை முடிவடைந்தவுடன் ஸ்ரீமான் நாப் மேட்டுப்பாளையம் மெயில் ஏறி சென்னைக்குப் புறப்பட்டு விட்டார். இவர் புறப்படுவதற்கு முன்னரே, கமிட்டியின் அங்கத்தினர்கள் திரூருக்குச் சென்று அவ்வண்டியைப் பார்வையிட உத்தரவு பெற்றுக் கொண்டனர். பின்னர் ஸ்ரீமான் மாஞ்சேரி இராமய்யரும் கிருஷ்ணவர்ம ராஜாவும் கள்ளிக்கோட்டைக்குச் சென்று அங்கிருந்து திரூருக்குச் சென்றார்கள். வண்டியை ஸ்டேஷன்மாஸ்டரின் உத்தரவு பெற்றுக்கொண்டு பரிசோதிக்க ஆரம்பித்தனர். உடனே டிராபிக் இன்ஸ்பெக்டர் ஸ்ரீமான் ரீவிஸ் வண்டியண்டையில் இருப்பவர்களை யெல்லாம் கைது செய்துவிடுவதற்காகப் பயமுறுத்தினார். ஸ்ரீமான் குன்னி கிருஷ்ணன் நாயர் தாங்கள் விசேஷக் கமிஷனரின் உத்தரவு பெற்றிருப்பதாகக் கூறியதையும் பொருட்படுத்தாமல் ஸ்ரீ ரீவிஸ் ஒரு கமிஷனரைக் கடுமையான மொழிகளால் திட்டினார். இச்சம்பவத்தைப் பற்றி ஸ்ரீமான் இராமய்யருங்கிருஷ்ணவர்மராஜாவும் ஸ்ரீ நாப்புக்கும் கவர்னருக்கும் தெரிவித்துள்ளார்கள்.

கண்ணனூர் சிறைச்சாலையில் அடைக்கப்பட்டு வைத்திருந்த மாப்பிள்ளைக்கைதிகள் இம்மாதம் 4-ந் தேதியில் கலகம் விளைவித்தார்கள். துப்பாக்கிப் பிரயோகம் செய்யப்பட்டது. அதன் பயனாக் கைதிகளில் ஒன்பது பேர் கொல்லப்பட்டும் பன்னிரண்டு பேர் காயமடைந்தும் போய் விட்டார்கள். மூன்று வார்டர்களுக்குச் சிறிது காயம் ஏற்பட்டது.

சென்னைக்கவர்னர் மலையாளத்திலுள்ள அதிதிகளைப் பார்ப்பதற்காக இம்மாதம் 23-ந் தேதியில் கள்ளிக்கோட்டைக்குச் செல்வரென்று தெரிகிறது.

மேல்ட்ரேரில் இதுவரை 2,750 மாப்பிள்ளைகள் சரணடைந்து விட்டனர். 1,122 கத்திகளும், 4 துப்பாக்கிகளும் அவர்களிடமிருந்து பிடுங்கிக்கொள்ளப்பட்டன.

## தென் இந்திய ரெயில்வே தொழிலாளர் மகாநாடு

தென்னிந்திய ரெயில்வே விசேஷ தொழிலாளர் மகாநாடு திரிசிராப்பள்ளியில் இம்மாதம் 11-ந் தேதியில் கூடுகிறது. ஸ்ரீமான் எல். ஸ்ரீநிவாசய்யங்கார் தலைமை வகிப்பார்.

## மதிப்புரை

### ஔவை அருந்தமிழ்

[ஆசிரியர்: ஸ்ரீமான் வரகவி திரு. அ. சுப்பிரமணிய பாரதியார்; வெளியிட்டோர்: கே. பழநியாண்டிப்பிள்ளை கம்பெனி, திருவல்லிக்கேணி, சென்னை. விலை பன்னிரண்டு அணா; தபாற்கூலி பிரத்தியேகம்.]

ஸ்ரீமான் வரகவி திரு. அ. சுப்பிரமணிய பாரதியாரையாவது அவர் எழுதிய நூல்களையாவது தமிழ் நாட்டிற்கு அறிமுகப்படுத்த வேண்டுவது அநாவசியம் என்று கருதுகிறோம். 'ஔவை அருந்தமிழ்' என்ற இந்நூலில் ஔவையார் பாடியதாகச் சொல்லப்படும் பாடல்கள் பலவும்—புறப்பாட்டு முதலியவைகளிலுள்ள சிலவற்றைத் தவிர-ஒருங்கே திரட்டப்பட்டு, விரிவுரையுடனும்விசேஷ வியாக்கியானத்துடனும் தக்க மேற்கோள்களுடனும் வெளியிடப்பட்டிருக்கின்றன. ஔவையார் ஒருவரா இருவரா என்பதைப்பற்றிய வாதத்திலாவது அவர் வாழ்ந்த காலம் எது என்பதைப் பற்றிய வாதத்திலாவது ஸ்ரீமான் பாரதியார் இறங்காம லிருந்ததற்காக அவரைப் போற்றுகிறோம். இவ்வாதங்கள் ஒரு பாஷையின் முன்னேற்றத்திற்கு அவசியமேயாயினும், சிலர் இவ்வாதங்களிலேயே தங்கள் காலமனைத்தையும் செலவிடுவதுமன்றி, இவ்வாதங்களை அடிப்படையாகக் கொண்டு சமய, ஜாதி வாதங்களையும் வேறு பலவற்றையும் கிளப்பிவிடுகின்றனர். 'நீதிக்களஞ்சியம்' என்று சொல்லப்படவேண்டிய'ஔவை அருந்தமிழ்' என்னும் இந்நூல் ஒவ்வொரு மாணவரிடத்திலும்—ஏன்? ஒவ்வொரு தமிழரிடத்திலும் இருக்க வேண்டுமென்பதை நாம் வற்புறுத்திக்கூற விரும்புகிறோம். ஸ்ரீமான் பாரதியார், நக்கீரர், காளமேகப்புலவர் போன்ற பல தமிழாசிரியர்களுடைய பாடல்களையும் அவர்களுடைய சரித்திரக் குறிப்புகளையும் இதே முறையில் எழுதி வெளியிட்டால் தமிழ் நாட்டிற்குப் பேருபகாரமாயிருக்கும். தமிழ் தற்போழ்து அடைந்திருக்கும் பரிதாப நிலையில்—எத்தனையோ லக்ஷக்கணக்கான இலக்கிய நூல்கள் வெளிவருதல் வேண்டும். 'நாவல்' ஆசிரியர்கள், தங்கள் கவனத்தின் ஒரு பகுதியை இத்துறையில் செலுத்தினால் நன்மையிருக்கும்.

### பால போதகன்

[வட ஆற்காடு ஜில்லா ஆரம்ப ஆசிரியர் சங்கத்தால் நடத்தப் பெற்றுவரும் ஒரு மாதாந்தப் பத்திரிகை. வருஷ சந்தா ஒரு ரூபா; சங்கங்களுக்கும் ஸ்தலஸ்தாபனங்களுக்கும் இரண்டு ரூபா; தனிப் பிரதி 2 அணா. ஆரணி திருநாவுக்கரசு அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.]

ஒவ்வொரு குழவினரும் அல்லது உத்தியோக முறையில் ஒன்றாக இருக்கும் ஒவ்வொரு பிரிவாரும் தனித்தனி முன்னேற முயன்று கொண்டிருக்கும் இக்காலத்தில் ஆரம்ப ஆசிரியர்களின் நன்மையை நாடி வெளி வந்திருக்கும் இப்பத்திரிகைக்கு நல்வரவு கூறுகிறோம். தொழிலில் கௌரவமானதும் ஆனால் பொருள் வருவாயில் மிகவும் குறைந்ததுமான உபாத்திமைத் தொழிலில் அமர்ந்திருப்போர்க்கு அதிக சுமையைத் தராத வண்ணம் இப்பத்திரிகையின் சந்தா வருஷம் ஒரு ரூபாயாக விதித்திருப்பதை நாம் போற்றுகிறோம். ஒவ்வொரு ஜில்லாவிலுள்ள ஆரம்ப ஆசிரியர்களும் இங்ஙனமே தனித்தனி பத்திரிகைகள் ஏற்படுத்திக்கொள்ள வேண்டுமென்பது நமது விருப்பம். இந்தப் பத்திரிகைகளில் சிறந்த ஆசிரியன்மார்களாலும் வேறு அறிஞர்களாலும் எழுதப்பட்ட வியாசங்கள் பொலிந்து விளங்க வேண்டும். உபாத்திமைத் தொழிலின் மேன்மை வெளிப்படுவதற்கு இப்பத்திரிகைகளே போதிய கருவிகளாக இருத்தல்வேண்டும். இப்பொழுது நமது பார்வைக்கு வந்திருக்கும் 'பாலபோதக'னின் முதல் இதழில் ஆங்காங்கு நடைபெற்ற சில கூட்டங்களின் நடவடிக்கைகளே பெரும்பாலுமாகக் காணப்படுகின்றன. இவைகளின் சுருக்கம்வெளிவர வேண்டிய தவசியமானாலும் வேறு பல நல்ல வியாசங்கள் வெளி வர வேண்டியதும் அவசியமாகும். அடுத்த இதழ் முதல் இது கவனிக்கப்படுமென்று கருதுகிறோம்.

### ஸ்ரீ சங்கர குரு சரிதம்

[ஆசிரியர்: ஸ்ரீ வெ. சோமதேவ சர்மா, சாந்தாச்ரமம், 200, தம்பு செட்டி தெரு சென்னை. விலை ஓர் அணா.]

இந்தியாவின் பெருமைக்குக் காரணமாயிருந்த பண்டை அறிஞர்களின் சரித்திரங்களையும் வேறு பல நீதிகளையும் ஏழைஜனங்களுக்குசுபயோகமாமாறு சொற்ப விலையில் வெளியிடவேண்டுமென்ற நோக்கம் இந்நூல் வெளிவந்ததற்கு அடிப்படையாக இருக்கிறதென்று நமக்குத்தெரிகிறது. இதற்காக ஸ்ரீமான் சர்மா அவர்களுக்குத் தமிழுலகம் கடமைப் படுதல் வேண்டும். இத்தகைய சிறிய நூல்களைச் செல்வர்கள் அச்சிடுவித்து நாட்டிற்கும் இனாமாக வழங்க முன் வர வேண்டும். இந்நூலில் ஸ்ரீ சங்கராச்சாரியாருடைய சரிதம் மிகவும் சுருக்கமாகவும் ஆனால் அழகாகவும் கூறப்பட்டிருக்கிறது.

## உத்தியோகஸ்தர்கள் இராஜிநாமா

ஐக்கிய மாகாணங்களைச் சேர்ந்த பண்டாசப் டிவிஷனல் ஆபீசர் ஸ்ரீ ஐந்பாபுலால் குப்தாவும் 9 கான்ஸ்டேபிள்களும் இனி இந்த கவர்ன்மெண்டின் கீழ் வேலை செய்ய முடியாதென்று ராஜிநாமா செய்து விட்டார்கள். லாகூரில் இரண்டு கான்ஸ்டேபில்கள் இராஜிநாமா செய்துவிட்டார்கள். கட்டேரவு இலாகா உதவி சிஜிஸ்திரார் ஜனாப் ஷாபி அகமது இட்வாய் இனி தற்போதைய ஆட்சிமுறையின் கீழ் உத்தியோகம் வகிக்க முடியாதெனச் சொல்லி ராஜிநாமா செய்துவிட்டாரென்று இண்டிபெண்டண்ட் பத்திரிகை அறிவிக்கிறது.

## ஒரு கான்ஸ்டேபிளின் இராஜிநாமா

ஸ்ரீமான் சா. இராஜகோபால பிள்ளை என்ற பண்ருட்டி போலீஸ் கான்ஸ்டேபில் மாப்பிள்ளைக் கைதிகளின் கோர மரணத்தை முன்னிட்டும் தேசத்திற்காகவும் தம்வேலையை இராஜிநாமா கொடுத்து விட்டதாகப் பண்ருட்டியிலிருந்து ஒருநிருபர் அறிவிக்கிறார்.

## லாலா லஜபதிராய் முதலியோர்

லாலா லஜபதி ராய், ஸ்ரீமான் சந்தாநம், டாக்டர் கோபிசந், ஸ்ரீ மாலிக் லால்கான் ஆகிய இவர்கள் இம்மாதம் 3-ந் தேதியில் இராஜ நிந்தனைக் கூட்டச் சட்டத்தின்படி லாகூரில் கைது செய்யப்பட்டார்கள். இவர்களின்வழக்கு பன்னிரண்டாந் தேதிக்கு ஒத்திப்போடப்பட்டிருக்கிறது.

## ஆசாமில் அடக்குமுறை

டார்ஜீலிங்கில் இரண்டு மாத காலம் வரை பொதுக்கூட்டங்களும் ஊர்வலங்களும் நடைபெறக் கூடாதென்று தடுக்கப்பட்டிருக்கிறது.

## பர்மா

பர்மாவில் அடக்குமுறை நாளுக்கு நாள் அதிகமாகிக்கொண்டே போகிறது. அநேகர் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள். பாயாசிபத்திரிகையின் ஆசிரியரான பாபூ என்பார் கைது செய்யப்பட்டார்.

## கடியாபட்டி ஆதி திராவிடர் மகாநாடு

(ஒரு நிருபரிடமிருந்து.)

துன்மதி௵ கார்த்திகைமீ 16-ந் தேதி காளையார்கோயிலுள்ள ஆதி திராவிடர்கள் ஒன்றுகூடி சில முக்கிய தீர்மானங்கள் செய்ய 108 கிராமங்களிலிருந்து 700 பேர் விஜயஞ் செய்திருந்தனர். செய்த தீர்மானங்களில் முக்கியமானது:—இனி யாரும் மதுபானம் செய்வதில்லை யென்பது. இதை அங்கீகரிக்க வந்திருந்த அனைவரிடமும் கையெழுத்து வாங்கப் பெற்றது.

ஏடுபெறநில்

நவசக்தி

"நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலையில்லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்பமில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளாவாளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே."—(அப்பர்)

சென்னை, 1921௵ டிசம்பர்மீ 9௳

## ஆண்டவனே!

நாம் பிறந்த தேசத்தை நோக்குகிறோம்; வானத்தைப் பார்க்கிறோம்; இமயமலையை எண்ணுகிறோம்; கங்கையைக் கருதுகிறோம்; கண்ணீர் விடுகிறோம்.

சந்திரன் ஒளிவீசுகிறது; நட்சத்திரங்கள் மின்னுகின்றன; குளிர்காற்று வீசுகிறது. இவைகளைக் காண்கிறோம்; பரிசிக்கிறோம். ஆனால் மனதில் மகிழ்ச்சியுண்டாகவில்லை. எந்த இயற்கையும் எமக்கு இன்பமூட்டவில்லை. சங்கீதமும் எமக்கு வெங்கீதமாகிறது. மனைவி மக்கள் இன்பமும் இன்பமாகத் தோன்றவில்லை. சுற்று முற்றும் பார்க்கிறோம். எல்லாம் துன்பமயமாயிருக்கின்றன. எமக்கு வேறு நினைவு தோன்றவில்லை.

ஆண்டவனே! உடனே உன் நினைவு தோன்றுகிறது. உன் நினைவு தோன்றுங் காலத்து எல்லையில்லா இன்பமும் மனஉறுதியும் எம்மையறியாமல் எழுகின்றன. அவ்வேளையில் நாம் பிறந்த தேசமும், வானமும், இமயமும், கங்கையும் எம்முடையன என்ற எண்ணம் பிறக்கிறது; சந்திரன் ஒளியும் நட்சத்திர மின்னலும் குளிர்காற்றும் இன்பத்தை ஊட்டுகின்றன. மனைவி மக்களும் இன்பமாகத் தோன்றுகிறார்கள். இஃதென்ன இரகசியம்? ஆதலால் உன் நினைவே எமக்கு வேண்டும் 107,108,124 எ. 144, 153. முதலிய சட்டங்கள் நினைவே வேண்டாம். அந் நினைவால் இன்ப மூண்டாகாது.

இவ்வுண்மை கண்டே தேசபக்தர்கள்—மகமதலி, ஷாக்குதலி நேருமுதலியோர் ஏகாந்தவாசம் பெற்று ஆண்டவனைக் கண்டு இன்ப நுகர்கிறார்கள். "அங்கத்தை மண்ணுக்காக்கி ஆர்வத்தை உனக்கே தந்து" என்றார் அப்பர் சுவாமிகள். மாயாகாரியமான உடல் எவரால் எவ்வாறு பந்திக்கப் படினும் படுக. அதன்மீது பற்றுக்கொண்டுள்ள மட்டும் எல்லாம் துக்கமயமாகவே தோன்றும். அவ்வுடல் பற்று அறுந்ததும் எல்லாம் இன்பமயமாகத் தோன்றும். அவ்வுணர்வு பெற்றவர்களே மக்களெனப்படுவார்கள்.

ஆண்டவனே! உன்னைவிட வேறு களைகண்காணேம். எல்லாம் நீ. உன்னைமறப்பது துன்பம்; உன்னை நினைப்பது இன்பம். இவ்வுணர்வு உலகம் முழுவதும் பரவுமாறு அருள் செய்க. உலகம் பேய்க்கு இரையாகிறது. உன்னால் படைக்கப்படும் பொருள்கள் உன் பிள்ளைகளாயுள்ள எல்லார்க்கும் பொதுவாகவன்றோ இருத்தல்வேண்டும்? கள்ளர்கள் மூடர்கள் பலசாலிகள் அதிகங் கவர்ந்து விடுகிறார்கள். பொதுவாக எல்லாவற்றையும் பகிர்ந்து கொடுக்கும் கடமையை நீயே இனி ஏற்றுக்கொள்ளல் வேண்டும். எமக்குரிய உரிமைப் பொருளை எமக்கு நல்க வேண்டுவது உனது கடமையே. அன்றுடஅப்பத்தையன்றோ அன்றாடம் பெற்று மனிதன் வாழ வேண்டும்? சென்றது கருதாமலும் சேர்வது நினையாமலுமன்றோ மனிதன் வாழவேண்டும்? இந்த ஞானம் உலகத்தில் மறைந்து விட்டதே! ஒருவர் உடைமையை மற்றொருவர் கவர்ந்தன்றோ வாழ முயல்கின்றார்? ஆண்டவனே! நீ தான் எமக்குத் துணை!

## பிடிபட்டார்களோ?

பிடிபட்டார்களோ? நம் பெண்மணிகள் பிடிபட்டார்களோ? நம் வங்காளச் சீதாதேவிகள் பிடிபட்டார்களோ? அந்தோ! அந்தோ!! தேவர்களுங் தீண்டற்கரிய நம் பெண்மணிகள், நம் ராணிகள், நம் தெய்வங்கள் பிடிபட்டார்கள். வங்காளத்தில் ஸி. ஆர். தாஸ் மனைவி உள்ளிட்ட ஐம்பது பேர் பிடிபட்டார்கள். ஸி. ஆர். தாஸ் மனைவியாரும் ஒரு சிலரும் விசாரிக்கப்பட்டு எச்சரிக்கை பெற்று வெளி வந்தார்களாம்; வந்ததும் தங்கள் தொண்டாகிய கதர் துணி விற்பதை மீண்டுந் தொடங்கி விட்டார்களாம். இந்தியப் பெண்மணிகள் சக்தி நூற்றைம்பது வருடங்களாக ஒடுங்கிவிட்டது. இப்பொழுது மகாத்மாகாந்தி அந்தச் சக்தியை உயிர்ப்பித்து வருகிறார். வங்காளத்தில் சித்தரஞ்சன தாஸ் மனைவியால் பழந் தெய்விக சக்தி உதயமாகிவிட்டது. அச்சக்தியின் வேகம் இனி வங்காளத்தில் தாண்டவம்புரியும். வங்காளப் பெண்மணிகளின் வீரத்தை — விரதத்தை லார்ட் ரொனல்ட்ஷே மறந்துவிட்டார்போலும்! லார்ட் ரொனல்ட்ஷே அரசாங்கம் தனது அதிகார சக்தியால் பெண் மணிகளைப் பிடித்து விசாரித்து எச்சரிக்கை செய்தது. எச்சரிக்கையைப் பொருள்படுத்தாது தாஸ் மனைவியார் மீண்டுந்தன் தொண்டைச் செய்யப் புறப்பட்டார்கள். லார்ட்ரொனல்ட்ஷேகோபங்கொண்டு பெண்மணிகளைப் பிடிப்பதைப் பார்க்கிலும், அவர்கள் மனோ நிலையைக் கண்டு மனித உளங்கொண்டு குறைகளை நிவர்த்தி செய்யவன்றோ முயலல் வேண்டும்?

லார்ட் ரொனல்ட்ஷே, இளவரசர் வரும்போது எல்லாக் கடைகளும் திறக்கப்பட்டிருக்கவேண்டும் என்ற எண்ணங்கொண்டு வீராட்டாகாசஞ் செய்கிறார். பெண்களைப் பிடிப்பதனாலும், வேறு பல அடக்கு முறைகளாலும தேசத்து ஜனங்களுக்கு வைராக்கியம் வலுப்படுமே யன்றித் தளர்ச்சி யடையாதென்ற புத்தி லார்ட் ரொனல்ட்ஷேவுக்கில்லை போலும்! இளவரசரை மகிழ்ச்சியோடு வரவேற்க வேண்டும் என்ற எண்ணங்கொண்டிருந்த ஒரு சிலர் மனமும் புண்பட்டு வரவேற்பில் கலவாது குவிந்துவிடும். இது சிறு குழந்தையும் ஊகித்துணரக் கூடியது. பெண்களைப் பிடிப்பதும் விசாரிப்பதும் நாகரிக அரசாட்சியின் செயலாகாது.

பெண் தெய்வங்களே! அதிகாரவர்க்கத்தின் அடக்குமுறை உங்களையும்வந்து முட்டுகிறது. காலங் கெட்டு வருகிறது. உங்கள் மன உறுதியால் தான் நாம் சுயராஜ்ஜியம் பெறல் வேண்டும்.

## ஸ்ரீமான் தண்டபாணி பிள்ளை அவர்கள்

ஸ்ரீமான் தண்டபாணிபிள்ளை அவர்கள் சிறந்த தேசபக்தர்களோடு சிறைச்சாலையாந்தவச் சாலையில் கலந்து வாழும் பேற்றைப் பெற்று விட்டார்கள். ஸ்ரீமான் பிள்ளையவர்கள் காங்கரஸ் கட்டளைப்படி ஒத்துழையா தருமத்தைக் கடைப்பிடித்துமன்றத்தில்எதிர்வாதம் புரியாது சிறை புகுந்தார்கள். இச்செய்தி தமிழ் நாட்டுக்குப் பெருமகிழ்ச்சி யுண்டாக்கும்.

ஸ்ரீமான் தண்டபாணி பிள்ளையவர்கள் மிக இளைஞர். அவர்க்கு மனைவி மக்களிருக்கின்றார்கள் இளமைப்பருவத்தில் மனைவிமக்களை விடுத்துப் பொதுக் காரியங்களில் தலையிடுதலருமை; அதனினும் அருமை தேச சேவையில் தலைப்படுவது; அதனினும் அருமை ஒத்துழையா இயக்கத்தில் சேர்வது; ஒத்துழையா இயக்கத்தில் சேர்வோர் எல்லா ஆசைகளையும் வெறுத்த துறவிகள் போன்றவர்களாயிருக்க வேண்டுமென்பதை ஈண்டு நேயர்களுக்கு நினைவூட்டுகிறோம். ஸ்ரீமான் தண்டபாணி பிள்ளையவர்கள் இளம்பருவத்தில் தேசத்துக்கு உழைத்துமனைவிமக்கள் வீட்டிலிருக்கத்தாம் சிறைவாசஞ் செய்ய ஒருப்பட்டது அவரது தேசபக்தியின் உறுதியையே புலப்படுத்துகிறது. இவர் போன்ற இளஞ் சிங்கங்கள் வெளியே கிளம்பிக் கர்ச்சனை செய்து சிறை புகுவதே பாரத மாதாவிற்குப் பெருமகிழ்ச்சி விளைப்பதாகும்.

ஸ்ரீமான் தண்டபாணிபிள்ளை யவர்கள் சுமார் ஐந்து வருட காலமாகத் தேச சேவை செய்துகொண்டு வந்தார். அவர் தேசசேவையில் தலைப்பட்ட நாள் முதல் சிறை புகுந்த நாள் வரை காங்கரஸ் கட்சியையே கடைப்பிடித்து வந்தார். ஸ்ரீமான் பிள்ளையவர்கள் உபந்நியாசம பொது ஜனங்கள் உள்ளத்தைக் கவர்வதென்பது நேரில் அனுபவித்தவர்க்குத் தெரியும். அவருடைய பேச்சில் அலங்காரமும் ஆகசியமும் ஒழுகிக்கொண்டிருக்கும் சாதாரண ஜனங்கள் உள்ளத்தில் கருத்துக்களைப் பசுமரத்தாணி போல் பதிய வைக்கும் ஆற்றல் தேசபக்தர் தண்டபாணி பிள்ளையவர்கள் பால் சிறந்து விளங்குவதை ஈண்டுவிரித்துக் கூறவேண்டுவதில்லை.

சென்னையில் ஸ்ரீமான் தண்டபாணி பிள்ளையவர்கள் வதிந்தபோது தொழிலாளர் முன்னேற்றத்தை நாடித் தொண்டு செய்துவந்தார். தொழிலாளர் இயக்கம் தோன்றுவதற்கும், அதுவலுப் பெறுவதற்குங் காரணர்களாயிருந்தவருள் நண்பர் தண்டபாணி பிள்ளையு மொருவர். இளமைப் பருவமுடைய பிள்ளையவர்களால் தமிழ் நாட்டுக்கு விளைந்த நலங்கள் பல உண்டு.

தமிழ் நாட்டில் தேசுந்தாங்கி ஆற்றவேண்டிய கடமைகளை ஸ்ரீமான் பிள்ளையவர்கள் ஒல்லும்வகை ஆற்றினார். இப்பொழுது பாரதமாதாவின் இன்புதல்வராக விளங்குகிறார். தண்டபாணி பிள்ளையவர்கள் ஸ்தூல உடல் அதிகாரவர்க்கச் சிறையில் கட்டுப்பட்டுக் கிடந்தாலும், சூட்சும உடல் தேசத் தொண்டைச் சூட்சுமமாகச் செய்து கொண்டிருக்கு மென்பதிற் சந்தேகமில்லை.

எமதருமை நண்ப! தண்டபாணி! இந்திய பாதுகாப்புச் சேனையில் சேர்ந்த வீர! நட்போடு, தண்டபாணியோடு, வீரத்தன்மையோடு தேசசேவை செய்தீர்; உமது இளம்பருவத்தை, அருமை மனைவியை, மைந்தனை, அன்னையை, சகோதரனை மறந்து, அவர்கள் மீது கொண்டபற்றை, ஆசையை, காதலை, அன்பைப் பாரத மாதாவின்மீது செலுத்திச் சிறைபுகுந்தீர்; நீர்புனிதரானீர்; உம்மைப் போற்றுகிறோம்.

ஸ்ரீமான் தண்டபாணி பிள்ளையவர்கள் செல்வத்திற்சிறந்தவரல்லர். அவர் வறியர். அவர் மனைவி மக்களைப் பாரதமாதாவின் வசம் ஒப்புவித்து விட்டுச் சிறைபுகுந்தார். அவரைக் காக்க வேண்டுவது தேசத்தார் கடமை. காங்கரஸ் அவர் குடும்பத்துக்குச் சிறு உதவி செய்யும். அவ்வுதவி போதாது. ஆதலால் தண்டபாணி பிள்ளையவர்கள் பால் பற்றுடைய தேசபக்தர்களும்மற்றவர்களும் அவர் குடும்பத்துக்குப் போதிய உதவி பு[illegible] வார்களாக. தண்டபாணி பிள்ளை[illegible]வர்களின் மனைவியார் விலாசம் வரு மாறு:—

ஸ்ரீமதி: கமலாம்பாள்,<br>தண்டபாணி பிள்ளை மனைவியார்,<br>41, கடை வீதி,<br>மேலைக் காவேரி, கும்பகோணம்.

## தொழிலாளர்க்கு உதவி

சென்னையில் பங்கிங்காம்- கர்நாடிக்மில் தொழிலாளர் வேலை நிறுத்தஞ் செய்துவருந்திக் கொண்டிருந்த போது, அவர்கட்குக் காங்கரஸ் போதிய உதவிபுரியவில்லை என்று அடிக்கடி நாம் எழுதிக் கொண்டிருந்தோம். 'காங்கரஸ் உதவி புரியும் என்ற நம்பிக்கையுண்டு' என்று இடைவிடாது குறிப்பிட்டுக் கொண்டிருந்தோம். காங்கரஸ் காலத்தில் போதிய உதவி நல்காவிடினும், இப்பொழுதாவது உதவிபுரிய ஒருப்பட்டதற்கு நன்றி கூறுகிறோம்.

இப்பொழுது சென்னையில் சுமார் ஐயாயிரந் தொழிலாளர்கள் வேலையின்றிக் கிடக்கிறார்கள். மில் அதிகாரிகள் அவர்களை இனி வேலையில் அமர்த்திக் கொள்வரென்று எதிர்பார்ப்பது கானற்சலத்தை நம்பிய கதையாக முடியும். ஆதலால் வேலையின்றி வருந்தும் தொழிலாளர்க்கும் அவரது குடும்பத்தார்க்கும் உதவி புரிய வேண்டுவது தேசத்தார் கடமை. தேசமகாசபையாகிய காங்கரஸ் இப்பொழுது முப்பதினாயிரம் ரூபா உதவிபிருக்கிறது. அம் முப்பதினாயிரமும் கைத்தறிக்கும் சர்க்காவுக்குமே செலவழிக்க வேண்டுமென்பது மகாத்மா காந்தியின் கட்டளை. முப்பதினாயிரம் ஏறக்குறைய ஐந்நூறு தொழிலாளர்க்கே பயன்படும். ஏனைய தொழிலாளர் கஷ்ட நிவர்த்திக்கென ஒரு கூட்டம் ஏற்பட்டிருக்கிறது. அக்கூட்டத்தார் தொழிலாளர் கஷ்டத்தை ஒழிக்கப் பல்வழியிலும் முயல்கின்றனர். அவர்கள் கட்டளைப்படி வருஞ் சனிக்கிழமை முதல் உண்டி வசூல் தொடங்கப்படும். தேச பக்தர்கள் போதிய உதவி செய்யுமாறு வேண்டுகிறோம்.

## எல்லா இந்தியத் தொழிலாளர் மகாநாடு

சென்ற வாரம் ஜாரியாவில் கூடிய எல்லா இந்தியத் தொழிலாளர் மகாநாடு மிக்க வெற்றியுடன் முடிவு பெற்றது. முதலாளிகளிற் சிலர் இம்மகாநாடு நடைபெறாதவாறு செய்த சூழ்ச்சிகள் யாவும் பாழ்பட்டன. நாட்டின் தற்போதைய நிலையில் இம்மகாநாடு கூடுவதனால் தீமையே விளையுமென்றும், ஆதலின் இதைத் தடுத்துவிடவேண்டுமென்றும் ஒருகால் இம்மகாநாடு கூடினால் ஐரோப்பிய இந்தியர்களுடைய உயிர்களைக் காப்பாற்ற அரசாங்கத்தார் தக்க ஏற்பாடுசெய்ய வேண்டுமென்றும் முதலாளிகள் தீர்மானங்கள் செய்து அனுப்பினர். இதனால் முதலாளிகளின் மனப்போக்கு நன்குபுலனாகும். இவர்கள், தொழிலாளர்களை என்னவென்று எண்ணிக்கொண் டிருக்கிறார்களோ? தொழிலாளர்கள், தங்களை விழுங்கும் பூதங்கள் என்பது இவர்கள் எண்ணம் போலும்! ஆயினும் இவர்கள் சூழ்ச்சிக்கிடையே மகாநாடு செவ்வனே நடைபெற்றதற்கு ஆண்டவனை வழுத்துகிறோம்.

மகாநாட்டுப் பந்தலில் சுமார் அறுபதினாயிரம் ஜனங்கள் கூடியிருந்தார்கள் என்றால் மகாநாட்டின் பெருமையைப்பற்றி நாம் அதிகமாக ஒன்றுங் கூற வேண்டுவதில்லை. மகாநாட்டில் தொழிலாளர்க்குரிய பல தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன. அவைகளில் முக்கியமான இரண்டொன்றைப் பற்றியே ஈண்டுக் குறிப்பிட விரும்புகிறோம்.



மகாநாட்டில் நிறைவேற்றப் பட்ட முதல் தீர்மானம் "இந்தியர்கள் சுயராஜ்யம் பெறுவதற்குரிய காலம் வந்துவிட்டது என்று எல்லா இந்தியத் தொழிலாளர் மகாநாடு தீர்மானிக்கிறது" என்பதாகும். இந்தத் தீர்மானம் பலரால் ஆமோதிக்கப்பட்டு ஆதரிக்கப்பட்ட பின்னர் 'காந்தியடிகளுக்கு ஜெய' என்ற பேராரவாரத்துடன் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது என்பதை இங்கு முக்கியமாக எடுத்துக்காட்ட விரும்புகிறோம். தொழிலாளர் இந்தியாவின் சுயராஜ்ய இயக்கத்தில் எவ்வளவு தூரம் ஈடுபட்டிருக்கிறார்கள் என்பது இதனால் நன்கு புலனாகிறது. ஒவ்வொரு மனிதனுக்குச் சுயராஜ்யம் பெறுவது பிறப்புரிமையாகும். மனிதன் சுதந்தரமின்றி வாழமுடியாது. இவைபோன்ற கருத்துக ளடங்கிய உபந்நியாசங்களே மகாநாட்டில் செய்யப்பட்டன என்று அறிகிறோம். படித்த வகுப்பாரிற் சிலரே சுதந்தரத்தைப்பற்றியும் சுயராஜ்யத்தைப் பற்றியும் ஆரவாரம் செய்கிறார்களே தவிர பொதுஜனங்கள் ஒன்றையும் கேட்கவில்லை யென்று இதுகாறும் அதிகாரவர்க்கம் கூறிக்கொண்டுவந்தது. இப்பொழுது இந்தியாவிலுள்ள தொழிலாளர் சுயராஜ்யம் பெறுவதென்று தீர்மானித்து விட்டனர். இந்த ஆவலை எந்த அடக்கு முறையாலும் தணிக்க முடியாது என்பதை அறிவுறுத்த விரும்புகிறோம்.

சுதேசிய விரதத்தைத் தொழிலாளர் அனைவரும் அநுசரிக்க வேண்டுமென்பது மற்றொரு முக்கிய தீர்மானமாகும். இத்தீர்மானப்படி இந்தியாவிலுள்ள தொழிலாளர் அனைவரும் சுதேசி விரதத்தை அனுஷ்டிப்பார்களானால் சுயராஜ்யத்தை எளிதில் பெற்றுவிடலாம். சுதேசிய மின்றிச் சுயராஜ்யமில்லை என்பதை ஒவ்வொரு தொழிலாளியும் உணர்ந்து நடப்பானேயாகில் காந்தியடிகளின் நோக்கம் விரைவில் கைகூடிவிடும் என்பதில் என்ன ஐயமிருக்கிறது? தன் நாட்டில் நெய்யப்பட்ட உடையைத் தரித்துக்கொள்ள ஒவ்வொரு தொழிலாளிக்கும் உரிமையுண்டு. இதை எந்த முதலாளியும் தடுக்க முடியாது; எந்த அரசாங்கமும் சுதேச உடையைத் தடுக்க முடியாது. ஆதலின் தொழிலாளர் சுதேச விரதத்தைக் குறித்து எவ்வித அச்சமுங் கொள்ளவேண்டுவதில்லை. இந்தியாவிலுள்ள தொழிலாளர் அனைவரும் இனிமேலாயினும் தீவிரமான சுதேசியவிரதத்தை அநுஷ்டித்துச் சுயராஜ்ய வேகத்தைத் துரிதப்படுத்த வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறோம்.

மகாநாட்டில் இன்னும் பல முக்கியமான தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன. அவைகளைத் தொழிலாளர் ஊன்றிக் கவனிப்பர் என்று நம்புகிறோம்.

சமீபத்தில் சென்னையில் நடைபெற்ற வேலைநிறுத்தத்தில் துன்புற்ற தொழிலாளர்க்கு அநுதாபங்காட்டியும் முதலாளிகளுடன் அதிகாரிகள் கலந்து கொண்டதைக் கண்டித்தும், தொழிற்கமிஷனர் உத்தியோகத்தை எடுத்துவிட வேண்டுமென்றும் மகாநாட்டில் ஒரு தீர்மானம் நிறைவேற்றப் பட்டிருக்கிறது. சென்னைத் தொழிலாளர்பால் அநுதாபங்காட்டிநிறைவேற்றப்பட்ட இத்தீர்மானத்திற்காக எல்லா இந்தியத் தொழிலாளர் மகாநாட்டுக்கு எமது நன்றியைச் செலுத்துகிறோம்.

## இடியேறு

### நாக்ஸின் நியாயம்.

அலகாபாத் ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டான ஸ்ரீமான் நாக்ஸ் என்பவர் பண்டித மோதிலால் நேருவுக்கு விநோதமான ஓர் எச்சரிக்கை செய்திருக்கிறார். ஸ்ரீமான் நேருவின் வீடு இருக்கும் தெருவழியாக இளவரசரின் ஊர்வலம் டிசம்பர்மாதம் பன்னிரண்டாந்தேதி செல்லுமென்றும் அப்பொழுது அவர் தமது வீட்டு எல்லைக்குள் அவருடைய பந்துக்கள் வேறு விருந்தினர் இவர்களைத் தவிர வேறு எவரையும் வரவிடக்கூடாதென்றும், போலீஸார் அங்கு வந்து போக இடங்கொடுக்கப்பட வேண்டுமென்றும் அவ்வெச்சரிக்கைக் கடிதத்தில் காணப்படுகின்றன. இதற்குப் பதிலாக ஸ்ரீமான் நேரு எந்தச் சட்டத்தின் படி. இந்த எச்சரிக்கை செய்யப்பட்டதென்பது தமக்குத் தெரியவில்லை யென்றும், தாம் ஒத்துழையாக் கட்சியைச்சேர்ந்தவராதலின், இளவரசருக்கு எவ்வித தீங்கும் வராதபடி தம்மால் இயன்றவரை பாதுகாப்பதே தம் கடமையென்றும் ஸ்ரீமான் நாக்ஸுக்குத் தெரிவித்திருக்கிறார். இந்தச் 'சுதேசி'யின் செருக்கே செருக்கு! ஐரோப்பிய அதிகாரி சொல்வதற்கு உடனே கீழ்ப்படிவதை விட்டு எந்தச் சட்டத்தின்படி இந்த எச்சரிக்கையைச் செய்தீர்கள் என்று கேட்கலாமா? !!!!! எத்தனை ஆச்சரியக் குறிகளைப் போடுவது?

### குல்லாய்மீது போர்

வங்காளத்திலுள்ள கோமில்லா ஜில்லாவைச் சேர்ந்த பிரமன் பாரியா சப் டிவிஷனல் உத்யோகஸ்தரான ஸ்ரீமான் டி. எச். எல்லிஸ் என்பவர் சென்ற மாதம் பதினாறுந் தேதி கீழ்க்கண்ட அறிக்கையை வெளியிட்டிருக்கிறார்:—

"காந்தி குல்லாய்களை அணிந்திருப்பது இந்தியன் பினல்கோட் 228-வது விதிப்படி குற்றமாகுமென்று அரசாங்கத்தார் தீர்மானித்து விட்டனர். இந்தக் குல்லாயைத் தரிக்கும் கனவான்கள், இந்த உத்தரவு கட்டாயம் அமுலுக்குக் கொண்டு வரப்படும் என்பதை உணர்தல் வேண்டும்."

காந்தி குல்லாய் தரிப்பது ஒரு குற்றம்! கடைகளை மூடுவது ஒரு குற்றம்! இவைகள் எந்தச் சட்டத்தின்படி குற்றங்கள் என்பது நமக்கு நன்கு புலனாகவில்லை. ஆனால், இப்பொழுது இந்தியாவிற்குத் தலைவராய் ஒரு சட்ட நிபுணர் வீற்றிருக்கிறார் என்பதை நாம் மறந்து விட்டோம்.

### கொடுமைச்செயல் செய்வது யார்?

ஒத்துழையாக்காரரே கொடுமைச்செயல்களைச் செய்கின்றவர் என்று ஒத்துழைப்பவரும் அதிகாரவர்க்கத்தவரும் கூறிக்கொண்டு வருகின்றனர். ஆனால் உண்மை எங்ஙனமிருக்கிறதென்பதைக் கீழ்க்கண்ட உதாரணத்தால் நேயர்கள் நன்கு தெரிந்துகொள்ளலாம்.

"மேற்கு காண்டேஷ் சப் டிவிஷனல் ஆபீசர் நவம்பர் மாதம் 16-ந் தேதி சக்ரி என்ற இடத்தில் முகாம் செய்திருந்தார். 17-ந் தேதி இந்தியா எங்கணும் விரதக்கொண்டாட்டம் நடைபெற்றதைப்போல் அந்த இடத்திலும் விரதக்கொண்டாட்டம் நடைபெற்றது. அஃது இந்த உத்தியோகஸ்தருக்கு அதிக கோபத்தை உண்டாக்கிவிட்டது. 19-ந்தேதி அந்தக் கிராமத் தலைவரை அழைத்து, விரதக் கொண்டாட்டம் நடை பெற்றதன் சம்பந்தமாகத் தமக்கு ஏன் தெரிவிக்கவில்லை யென்று கடிந்து கொண்டார். இதனுடன் நில்லாமல் அவருடைய செவியைப் பிடித்துக்கொண்டு நெற்றியில் ஓர் அடி கொடுத்தார்; அவருடைய தலைப்பாகையைக் கீழேதள்ளிவிட்டார்; அவரை வெளியே இழுத்து வந்து தள்ளி விட்டுக் கதவைச் சாற்றிவிட்டார். இதைக் கண்டு அவ்வூர் வாசிகள் அதிக கோபங்கொண்டு ஒரு கண்டனக் கூட்டம் நடத்துவதாகத் தீர்மானித்தனர். ஆனால் சப் டிவிஷனல் உத்தியோகஸ்தர் இக்கூட்டத்தைத் தடுத்துவிட்டார். எனவே ஜனங்கள் இக்கூட்டத்தை ஒரு தனிக் கட்டிடத்தில் நடத்தினர்கள். இங்ஙனமே பல கிராமங்களிலும் கண்டனக் கூட்டங்கள் நடைபெற்றன. இந்த உத்தியோகஸ்தரைத் தகுந்தபடி தண்டியாவிட்டால், இவர் சக்ரி கிராமத் தலைவரை அடித்தது அரசாங்கத்தாரால் ஆதரிக்கப்படுகிறதென்றே என்று எண்ணப்படும் என்று ஒரு கூட்டத்தில் கூறப்பட்டது."

சப் டிவிஷனல் உத்தியோகஸ்தருடைய செய்கையை அரசாங்கத்தார் ஆதரிக்கின்றனரா?

### ஒரு விநோத செய்தி

மாப்பிள்ளைமார் குழப்பத்தைப்பற்றிப் பல விநோதமான செய்திகள் வெளிநாடுகளுக்கு அனுப்பப்படுகின்றன. வெளிநாடுகளுக்குத் தந்திகளை அனுப்பும் ராய்ட்டர் சங்கத்தினர் இந்தச் செய்திகளை எங்கிருந்து தெரிந்து அனுப்புகின்றனர் என்பதை அறிய விரும்புகிறோம். 'ஜப்பான் டைம்ஸும் மெயிலும்' என்ற பத்திரிகையில் பின்வரும் விஷயம் காணப்படுகிறது:—

"குழப்பம் நடைபெறும் இடத்தில் மாப்பிள்ளை ஸ்திரீகளும் சண்டைசெய்ய ஆரம்பித்து விட்டார்கள். இந்தப் பெண்பூதங்கள் கூட்டங் கூட்டமாகச் சேர்ந்துகொண்டு இந்துக்களின் வீடுகளைக் கொள்ளையடிக்கின்றன; வீட்டில் உள்ளவர்கள் தங்களிடத்திலிருப்பதைக் கொடாவிட்டால் சலக்கார மாப்பிள்ளைகளை அழைத்து வருவதாகப் பயமுறுத்துகின்றன. பெண்களால் காயப்படுத்தப்பட்ட பல ஹிந்துக்கள் இப்பொழுது சிகிச்சா சாலையில் இருக்கிறார்கள்."

பெண்பூதங்கள் மலையாளத்தில் இருப்பதாக நமக்குத் தெரியவில்லை. ஆனால் ராய்ட்டரின் கருணையினால் ஜப்பானுக்குத் தெரிந்திருக்கிறது. விநோதம்!

## அடக்கு முறையின் வியாபகம்

### அலகாபாத் தலைவர்கள்

#### பண்டித மோதிலால் நேரு

பண்டித மோதிலால் நேரு டிசம்பர் மாதம் 7-ந் தேதி போலீஸ் டிபடி சூப்பிரண்டெண்டாலும் இன்ஸ்பெக்டராலும் அவர் வீட்டிலேயே கைதி செய்யப்பட்டார். அவருடைய வீட்டில் இருக்கும் ஐக்கிய மாகாணத்தொண்டர் படை சம்பந்தமான தஸ்தவேஜுகளைப் பரிசோதிக்கவும் போலீஸார் வாரண்டு கொண்டு வந்திருந்தனர். கைதியாக்கப்படுவதற்கு முன்னர் பண்டிதர் அஹிம்சா தர்மத்தைக் கடைப்பிடித்து ஒழுக வேண்டுமென்று ஜனங்களுக்கு உபதேசித்துவிட்டுச் சென்றார்.

#### நகரபரிபாலன சபைத் தலைவர்

அலகாபாத் நகரபரிபாலன சபைத் தலைவரான பாபு புருஷோத்தமதாஸ் தாண்டன் ஏழாந்தேதி மாலை நடை பெறவிருந்த நகர பரிபாலன சபைக் கூட்டத்திற்குச் சென்று கொண்டிருந்தபோது கைதி செய்யப்பட்டார்.

#### பண்டித ஜவஹரிலால் நேரு

லக்ஷ்மணபுரி ஜில்லா மாஜிஸ்ட்ரேட் பிறப்பித்த ஒரு வாரண்டின்படி பண்டித ஜவஹரிலால் நேரு கைதி செய்யப்பட்டு லக்ஷ்மணபுரிக்கு அழைத்துச் செல்லப்பட்டிருக்கிறார்.

#### வேறு தலைவர்கள்

'இண்டிபெண்டெண்ட்' பத்திரிகையின் ஆசிரியரான ஸ்ரீமான் ஜார்ஜ்ஜோசப், பண்டித மோதிலால் நேருவின் மருகர்களான பண்டிதர்கள் ஷாம்லால் நேரு மோஹன்லால் நேரு, மௌலானா கமாலுதீன் ஜாபரே பாபு ரனேந்திரநாத்வசு, ஸ்ரீமான் கௌரிசங்கர மிஸ்ரா, திலகர் பாடசாலையின் தலைமை உபாத்தியாயர் நாதர் ஆகிய இவர்களும் கைதி செய்யப்பட்டனர். ஸ்ரீமான்கள் ஜார்ஜ் ஜோஸப்பின் வீடும் பண்டித ஷாம்லால் நேருவின்வீடும்பரிசோதனைசெய்யப்பட்டன.

#### இண்டிபெண்டெண்ட் பத்திரிகை

'இண்டிபெண்டெண்ட்' பத்திரிகையின் ஆசிரியரான ஸ்ரீமான் ஜார்ஜ்ஜோஸப் கைதி செய்யப்பட்டதால், ஸ்ரீமான் மஹாதேவ எச். தேசாய், மேற்படி பத்திரிகையின் பிரசுரகர்த்தராக மாஜிஸ்ட்ரேட் முன் பதிவு செய்து கொண்டார். மாஜிஸ்ட்ரேட் இரண்டாயிரம் ரூபாய் ஜாமீன் கேட்டார். அங்ஙனமே கொடுக்கப்பட்டது. பத்திரிகை மறுபடியும் வெளிவந்துவிட்டது.

#### காங்கிரஸ் கமிட்டி பரிசோதனை

அலஹாபாத் காங்கிரஸ் கமிட்டி உத்தியோக சாலையும் கிலாபத் கமிட்டி உத்தியோக சாலையும் எல்லா இந்திய காங்கிரஸ் கமிட்டி உத்தியோக சாலையும் பரிசோதிக்கப் பட்டன.

#### விசாரணை

கைதி செய்யப்பட்ட பண்டித மோதிலால் நேரு முதலியவர்களுடைய வழக்கு டிசம்பர் மாதம் ஏழாந்தேதி ஜெயிலுக்குள் ஜில்லா மாஜிஸ்ட்ரேட் ஸ்ரீமான் காக்ஸ் முன்னிலையில் ஆரம்பமாயது. அரசாங்க நியாயவாதி ஸ்ரீமான் எம். எல். பானர்ஜி அரசாங்கத் தரப்பில் ஆஜரானர்.

முதலில் ஸ்ரீமான் ஜார்ஜ் ஜோசப் விசாரிக்கப்பட்டார். நவம்பர் மாதம் 26-ந் தேதி வெளியான இண்டிபெண்டெண்ட் பத்திரிகையில் சட்ட விரோதமான கூட்டம் ஏற்படுவதற்கு ஆதாரமாக வியாசங்கள் எழுதியிருந்தார் என்பது இவருடைய முதற் குற்றம். போலீஸ் சூப்பிரண்டெண்டான ஸ்ரீமான் நியுபை மேற்படி பத்திரிகையின் பிரதியை ஆஜர் படுத்தினர். ஐக்கிய மாகாணத்து காங்கிரஸ் கமிட்டியின் அறிக்கையை தம் பத்திரிகையில் வெளியிட்டது இவர் செய்த இரண்டாவது குற்றம். ஸ்ரீமான் ஜோஸப் எந்தக் கேள்விக்கும் பதில் கூறமுடியாதென்றும் எவ்வித வாக்கு மூலத்தையும் ஆஜர்படுத்த முடியா தென்றும் கூறி விட்டார்.

இரண்டாவதாக ஸ்ரீமான் கமாலுதீன் ஜாப்ரேயின் வழக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது. இச்சாசேவகரின் உறுதிமொழிப் பத்திரத்தில் கையெழுத்திட்டிருந்ததே இவர் செய்த குற்றம். மேற்கூறப்பட்ட உறுதி மொழிப் பத்திரத்தில் உள்ளது தம் கையெழுத்தே யென்றும் வேறு எந்தக் கேள்விக்கு பதில் கூறமுடியாதென்றும் ஸ்ரீமான் கமாலுதீன் கூறிவிட்டார்.

பண்டிதமோதிலால் நேரு மூன்றாவதாக விசாரிக்கப்பட்டார். மாஜிஸ்ட்ரேட், 'இண்டிபெண்டெண்ட்' பத்திரிகையின் பிரதியை எடுத்துப் பண்டிதருக்குக் காண்பித்தார். ஆனால் பண்டிதர் எவ்வித கேள்விக்கும் பதில் கூற மறுத்துவிட்டார். பண்டிதருடைய வீட்டையும் எல்லா இந்திய காங்கிரஸ் கமிட்டியையும் பரிசோதனை செய்ததாகவும் அதில் காணப்பட்ட இச்சாசேவகர் உறுதிமொழிப் பத்திரமொன்றில் பண்டிதருடைய கையெழுத்து இருந்ததாகவும் கோத்தவால் கூறி அதனை கோர்டில் ஆஜர்படுத்தினர். பண்டிதர், தாம் எவ்வித வாதமும் செய்யப் போவதில்லை யென்றும் தாம் நீதிஸ்தலத்தின் முன்னர் இல்லை யென்றும் அதிகாரவர்க்கத்தினுடையகாரியஸ்தரின் முன்னிலையில்நிற்பதாகவும் அந்த அதிகாரவர்க்கம் தமக்குச் சத்துருவென்றும் கூறினர்.

ஸ்ரீமான் புருஷோத்தம தாஸ் தாண்டன் தாம் எவ்வித கேள்விக்கும் பதில் கூறமுடியாதென்றும் தாம் இச்சாசேவகர் என்பது உண்மைதானென்றும், வாக்குமூலத்தில் கையெழுத்திட முடியாதென்றும் கூறிவிட்டார்.

ஸ்ரீமான் ஆர். என். வசு தாம் நீதிஸ்தலத்தாருக்கு எவ்விதத்திலும் உதவி செய்ய முடியாதென்றும் ஆனால் இச்சாசேவகர் உறுதிமொழிப் பத்திரத்தில் கையெழுத்திட்டிருப்பதாகவும் கூறினர்.

பண்டித ஷாம்லால் நேரு தாம் ஒத்துழையாக்காரரென்றும் தாம் எவ்வித கேள்விக்கும் பதில் கூறமுடியாதென்றும் கோர்ட்டாருக்கு எவ்விதத்திலும் தாம் உதவிசெய்ய முடியாதென்றும் கூறினர்.

பண்டித மோஹன்லால் நேருவும் அங்ஙனமே கூறினர். மற்றவர்களும் ஏறக்குறைய இங்ஙனமே கூறினர்கள்.

அரசாங்க நியாயவாதியான ஸ்ரீமான் பானர்ஜி சிலருடைய வழக்குகளை ஒத்திப் போட வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.

#### தண்டனை

பிறகு இரவு பத்து மணிக்கு ஜில்லா மாஜிஸ்ட்ரேட் சிலருடைய வழக்குகளில் தீர்ப்புக் கூறினர். பண்டித மோதிலால் நேரு ஆறு மாத வெறுங்காவல் தண்டனையும் ஐந்நூறு ரூபா அபராதமும் விதிக்கப் பட்டார். பாபு புருஷோத்தமதாஸ் தாண்டன் 18 மாத வெறுங்காவல் தண்டனையும் 250 ரூபாய் அபராதமும் விதிக்கப்பட்டார். ஸ்ரீமான்கள் கமாலுதீன் ஜாப் ரேயும் ஆர். என். வசுவும் ஆறுமாத வெறுங்காவல் தண்டனையும் 100 ரூபா அபராதமும் விதிக்கப்பட்டார்கள். மற்றவர்கள் வழக்கு ஒத்தி போடப்பட்டிருக்கிறது. தண்டனை யடைந்தவர்கள் தனித்தனியாக மோடார் வண்டிகளில் தனித்தனி ஜெயிலுக்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள்.

#### கூட்டம் தடுக்கப்பட்டது

ஆமதாபாத் காங்கிரசுக்குப் பிரதிநிதிகள் தெரிந்தெடுத்தனுப்புவதற்கு வேண்டி டிசம்பர் மாதம் 7-ந் தேதி சுயராஜ்ய சபை மைதானத்தில் கூடுவதாக யிருந்த கூட்டத்தை ஜில்லா மாஜிஸ்ட்ரேட் தடுத்துவிட்டார்.

#### பண்டித கபில தேவமாளவ்யா

பண்டித கபில தேவமாளவ்யாவும் வேறு ஆறு பேரும் ஒன்பது மாத வெறுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டனர்.

### கல்கத்தாவில் ஸ்திரீகள்

ஸ்ரீமான் சித்தரஞ்சன தாஸின் ஒரே புத்திரரான ஸ்ரீமான் சிரரஞ்சன தாஸும் வேறு நான்கு இச்சா சேவகர்களும் கதர் துணிகளை விற்றுக்கொண் டிருந்தார்கள் என்ற காரணத்திற்காகக் கல்கத்தாவில் கைதி செய்யப்பட்டார்கள். இதன்பிறகு ஸ்ரீமான் தாஸின் மனைவியும் அவருடைய சகோதரியாகும் ஸ்ரீமதி சுநீதி தேவியென்பாரும் வேறு பல இச்சா சேவகர்களும் கதர் துணி விற்று பொதுஜனப் போக்கு வரவைத் தடுத்துக் கொண் டிருந்தார்கள் என்ற காரணத்திற்காக டிசம்பர் மாதம் ஏழாந் தேதி கைதி செய்யப்பட்டார்கள். ஸ்திரீகளைக் கைதி செய்தார்கள் என்று கேட்டவுடன் பல இச்சா சேவர்கள் வந்து தங்களையும் கைதி செய்யும் படி கூறினர்கள். போலீஸார் அவர்களில் நாற்பது பேரைக் கைதி செய்தார்.

மேற்கூறப்பட்ட ஸ்திரீகள், கைதி செய்யப்பட்ட சிறிது நேரம் கழித்து அரசாங்கத்தாரால் எச்சரிக்கை செய்யப்பட்டு விடுதலை செய்யப்பட்டார்கள். உடனே இவர்கள் மறுபடியும் எட்டாந்தேதி சித்பூர் ரோட்டில் வந்து மறியல் வேலை செய்ய ஆரம்பித்தார்கள். ஆனால் ஒத்துழையாத் தலைவர்களின் வேண்டுகோளுக் கிணங்க மறியல் வேலையி னின்றும் விலகிக் கொண்டார்கள். உடனே மூன்று பஞ்சாபிய ஸ்திரீகளும் இரண்டு சீக்கிய இச்சாசேவகர்களும் மறியல் வேலை செய்யத் தொடங்கினர்கள். போலீஸார் இரண்டு சீக்கியர்களையும் கைதி செய்தார்கள். உடனே எண்ணிறந்த இச்சா சேவகர்கள் மறியல் வேலை செய்ய ஆரம்பித்தார்கள். போலீஸார் அவர்களில் நூற்றுப்பது பேரைக் கைதி செய்தார்கள்.

கலாசாலை மாணவர்கள் இச்சா சேவகர்களாகச் சேர்ந்துகொண்டு வருகிறார்கள். இன்று முதல் அவர்கள் மறியல் வேலையைத் தொடங்குவார்கள்.

பெண்களைக் கைதி செய்தார்கள் என்று தெரிந்ததும் ஜனங்கள் கூட்டங்கூட்டமாகக் காங்கிரஸ் உத்தியோகசாலைக்குச் சென்று இச்சா சேவகர்களாகப் பதிவுசெய்து கொண்டுவருகிறார்கள். சுமார் நூறு சீக்கிய ஸ்திரீகளும் இச்சா சேவகர்களாகப் பதிவு செய்து கொண்டார்கள்.

### பத்திரிகைகளில் 'தலை'யில்லை

டிசம்பர் மாதம் 8-ந் தேதி காலை முதல் அமிருத பஜார் பத்திரிகை தலையங்கமின்றி வெளி வருகிறது. ஸ்திரீகள் கைதி செய்யப்பட்ட செய்தியை தலையங்கத்தின் இடத்தில் போட்டு காட்டின் கன்மையை உத்தேசித்து இன்னும் சிறிது காலம் வரை தலையங்கம் எழுதப் போவதில்லை யென்று தெரிவிக்கிறது.

'சர்வண்ட்' பத்திரிகை 'மௌன விரதம்' என்று தலையங்கமிட்டு, ஜனங்களின் பிறப்புரிமைகளும்இப்பொழுதபறிமுதல்செய்யப்படுகின்றமையால் சிறிது காலம்வரைமௌனவிரதம் பூண்டிருப்பதே நல்லதென்று எழுதி தலையங்கங்கள் இல்லாமல் வெளிவருகிறது.

### ஸ்ரீமான் ஜிதேந்திரலால் பானர்ஜி

கல்கத்தாவில் பிரபல ஒத்துழையாக்காரரான ஸ்ரீமான் ஜிதேந்திரலால் பானர்ஜி இராஜத்துரோகக்குற்றஞ் சாட்டப்பட்டு ஒரு வருடக் கடுங்காவல் தண்டனைவிதிக்கப்பட்டார்.

# தமிழ் நாட்டிற்கு

### ஸ்ரீமான் தண்டபாணி பிள்ளை விடுத்த முறையீடு

எனதருமைத் தாய்த் திருநாடே!

நான் என்றைக்கு உன் திருவயிற்றிலிருந்து உதித்தேனோ அன்று முதல் என் உலகத்தாய் என்னைத் தாலாட்டித் தாங்க வைத்ததையும், உன் செந்தமிழினால் என்னைப் பாலூட்டிச் சோறூட்டி வளர்த்து வந்ததையும், உன் செந்தமிழினால் நாவை நான் இவ்வுடலை நீத்து உன் பொற்பாதம் சேர்வேனானால் அதற்காக மனைவி மக்கள் ஒப்பாரி வைத்து அழுவதையும், உன் தமிழினால், இதை அறியாத உன் மக்களிற் சிலர் பொதுக்கூட்டங்களிலும் பந்துமித்திரர்க ளிடையிலும் அன்னிய பாஷையை உபயோகித்து வந்தார்கள். இதை அறவே ஒழித்துத் தமிழே பேசப்படவேண்டுமென்று பல கூட்டங்களில் நான் கிளர்ச்சி செய்து சிலரின் மனஸ்தாபத்திற்கும் ஆளாயிருக்கிறேன்.

"உன்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலம்" என்று உன் திருவடி பணிகின்றேன். உன் முன்னேற்றத்தைப்பற்றி எண்ணாத சிந்தையும், உன் புகழைப் பேசாத நாவும், உன் திருப்பணியைச் செய்யாத கரங்களும், இருந்தென்ன? போயென்ன காண்? என் அம்மையே! உனது திருப்புகழைப் "பேசாத நாளெல்லாம் பிறவா நாளே" யாதலால் எனக்குப் பேசும் சுதந்தரத்தை நீ எப்போது அளிக்கப் போகிறாய்? அன்னையே! "என்கை யுனக்கல்லா தேப்பணியும் செய்யற்க, என் புஜங்கள் நின் அன்பரல்லார் தோள் சேரற்க" வரந்தருவாயோ? "ஒருமையுடன் நினது திருமலரடி நினைக்கின்ற உத்தமர்தம் உறவுவேண்டி" அவர் உறைவிடமாம் சிறையை உவந்தனுக எந்தனுக்கு நீ விடைதரவேண்டும். உன்மக்களிற் சிலர் ஒருவகுப்பாரைத் தாழ்ந்தவரென்றும், தீண்டப்படாதவரென்றும் ஒதுக்கிவைத்ததன் காரணமாக (கர்மத்தின் பயனாய்) நாங்கள் ஏனையவரால் தாழ்த்தப்பட்டும், தீண்டப்படாமலும் இருந்தும் இன்னும் அவர்களுக்குத் தீண்டாமையை ஒழிக்கும் சக்தியையும், புத்தியையும் நீ கொடுக்காததேனோ? உன் திருவயிற்றிற் பிறந்த பிள்ளைகளனைவரும் பல மதங்களிலும் பல ஜாதிகளிலும் ஈடுபட்டிருந்தாலும், மண்ணுய்ப் போகும்பொழுது ஒன்றாய்ப் போகிறார்களே தவிர அந்த ஒற்றுமையை முன்னாடி நீ அவர்களுக்குக் கொடுத்தாலென்ன? உன்னாலை ஓதி உன் கலையைக் கல்லாமையினால், பரநூலும் பரகலையும் வந்து உன் மக்களின் தன் வசத்தைப்போக்கிக் கொண்டன. எது எப்படியிருந்தபோதிலும் யான் உன் சுதந்தர மீட்சிக்காக என்னாலான சிறு கைங்கரியம் செய்து வந்தேன். யாவர்க்கு மேலாம் அளவிலாச் சீருடைய ஏ பாரதமாதாவே! யாவர்க்கும் கீழாம் அடியேனையாவரும் பெறற்கரிய இன்பத்திற்காளாக்கித் தவச்சாலையில் ஏகாந்தமாக இருக்க இடந்தேடிக் கொடுத்த உனக்கு நான் கைம்மாறு செய்யும்வகையறியேன். தலைவர்கள் சொல்லுக்கிரபடிஜனங்கள் நடந்தால் உன்னுடைய சுதந்தரத்தை ஒரு நாளில் நிலைநாட்டிவிடலாம். சொல்வதைக் கேளாத ஜனங்களிடையி லிருப்பதிலும் சிறையிலிருப்பதே மேல். கட்குடியை யொழிக்க வேண்டும், கைராட்டினஞ் சுற்றவேண்டும், கத்தர் துணி கட்ட வேண்டும் என்று மகாத்மாவின் ஆணையைத் தலைமேற்றாங்கி இரவு பகலாய்க் கிராமங் கிராமமாய்ப் போய்க் கதறியும் இன்னும் போதிய பலனை யளிக்காத ஜனங்களிடையிலிருப்பதிலும், சிறையிலிருப்பதே மேலென்று நானுங் கருதி அதையடைய விரும்புகிறேன். என்னிடம் அன்புகொண்டது போல் நடிக்கும் பந்துமித்திரர்களும் (உண்மையான அன்பிருக்குமானால் நான் சிறை புகாமலிருக்க வேணுமானால் சொன்னபடி கேட்டிருக்க வேண்டும்) காங்கிரஸ் கட்டளையின்படி நடவாமையினால் அவர்களை விட்டுப் பிரிந்து நான் சிறையிலிருக்கவே பிரியப்படுகின்றேன். "கூழுக்கும் ஆசை, மீசைக்கும் ஆசை" என்பது போல் உத்தியோகத்தி லமர்ந்துகொண்டும், பள்ளியில் படித்துக்கொண்டும், பட்டத்தைக்கௌவிக்கொண்டும், கள் சாராயத்தைக் குடித்துக்கொண்டும், கைராட்டினஞ் சுழற்றாமலும், அன்னியஆடையை விலக்காமலும் உள்ள சில கனவான்கள் தேசஊழியஞ் செய்துசிறைபுகுந்தோருக்காகக்கூட்டங்கூட்டி வாய்ப் பேச்சினால் அனுதாபங் காட்டுவதை நான் விரும்பவில்லை. உண்மையாய், சிறைபுகுந்தோர் சொற்படி அனுஷ்டானத்தில் சுதேசியத்தைக் கடைப்பிடித்து, சுயராஜ்யத்தைச் சீக்கிரமடைந்து அதன் மூலமாயவர்களை விடுதலை செய்ய ஏதேவி! உன் மக்களுக்கு நீ அருள் புரியாயா? நான்சிறைபுகுந்தால் என்னைச் சிறையில்வந்து பார்க்கவேண்டுமென்று நான்யாரையும் விரும்பவில்லை. என்னிடம் அன்புகொண்ட என்சகோதரர்கள் நான் விட்ட வேலையைப் பூர்த்திசெய்து சிறைக்குள் வந்தால் என்னைப்பார்க்கமுடியும். சிறைக்கு வெளியில் நின்று என்னைப் பார்க்க வருபவர்களைநான் பார்க்கமறுத்துவிடுவேனென்பதை முன்னாடியே தெரிவித்துக் கொள்ளுகிறேன். ஜெயில் உணவும் ஜெயில் உடையும் கஷ்டமாயிருந்த போதிலும், சாதாரணமாகவோ கடினமாகவோ காவல் ஏற்பட்ட போதிலும் சந்தோஷமாக நான் அவைகளையே ஏற்றுக்கொள்ள விரும்புகிறேன். ஆயிரக்கணக்கான என் சகோதரர்கள் உண்ணும் உணவும் உடுக்கும் உடையையும் நான் தள்ளி, எனக்குமட்டும் சிபார்சிருக்கிறதென்று நல்லுணவும் நல்லுடையும் கொள்ள நான் விரும்பவில்லை. கஷ்டப்படுவதற்காகச் சிறை போகிறேமேயொழிய காலாட்டி யுண்ணுவதற்காகச் சிறை புகவில்லை என்பதை எனது சகோதரர்கள் உணர்வார்களாக. ஓ பாரத தேவி! உன் மக்களில் ஒருவராகிய, அங்குஷ்டப் பிரமாணமுள்ள அகஸ்தியரென்பார்-தமிழையீன்ற தகைமையாளர்-முன்னொருகால் கைலாய மலையில் திருக்கலியாணம் நடக்கும்போது கூடின கூட்டத்தால் உன் நிலை தலைகீழாய்த் தவறிவிடுமென்றெண்ணி அதைச் சமப்படுத்தப் பொதியமலையில் தங்கியிருந்தாரென்று புராணத்திற் கூறப்பட்டிருக்கிறது. அது உண்மையானால் இப்பொழுது உன் வடபாகத்தில் உள்ள மாகாணங்கள் எல்லாம் உண்மைத் தேசபக்தர்கள் நிறையத் தங்கியிருக்கும் பாக்கியத்தைப் பெற்றிருப்பதால் வடதட்டு தாழ்ந்து தென்தட்டு (தமிழ் மாகாணம்) உயர்ந்துமிருப்பதை நீ உடனே சமன் செய்யவேண்டி நல்ல தலைவர்கள் பலரை உற்பத்தி செய்யவேண்டும். அவர்கள் மூலம் நீ சுதந்தரம் பெற்று என்னையும் மடியிலிருந்து வெளியில் விளையாட விடவேணுமாய்த் திருவடியைப் பிரார்த்திக்கின்றேன். ஆயிரக்கணக்கான மேடைகளில் இலக்ஷக்கணக்கான உன் மக்களுக்கு மகாத்மா முதலானவர்கள் என்ன உபதேசித்தும் போதிய பலனேற்படாததைக் கண்டு அவர்களைப்பற்றி யுன்னிடம் முறையிட்டுள்ளேன். சிறையில் என்னவதை செய்தாலும் மன்னிப்புக் கேட்குமடமையாகுமேன்பதை யுணர்ந்த என் உள்ளத்தை நீ உறுதிப்படுத்த வரந்தந்து என்னை ஆசீர்வதிக்கும்படி உன் திருவடிகளைப் பிரார்த்திக்கின்றேன். எந்தாய் வாழ்க. வந்தேமாதரம்.

## ஸ்ரீமான் தண்டபாணி பிள்ளை வழக்கு

ஸ்ரீமான் என். தண்டபாணி பிள்ளையின் மீது தொடுக்கப்பட்டிருந்த ஜாமீன் வழக்கு இம்மாதம் 2-ந் தேதியில் தஞ்சாவூர் அடிஷனல் ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டின் முன்னிலையில் ஆரம்பமாயிற்று. அரசாங்கத் தரப்பில் 4 சாட்சிகள் விசாரிக்கப்பட்டார்கள். வழக்கு மறுபடியும் மறுநாளைக்குத் தள்ளிப்போடப்பட்டது. ஸ்ரீமான் தண்டபாணி பிள்ளை கோர்ட்டைவிட்டு வெளியில் வந்ததும் மாயவரம் தாலூக்காவில் பேசக் கூடாதென்று கட்டளையிட்டிருந்தும் அக்கட்டளையை மீறி பேசியதற்காகக் கைதி செய்யப்பட்டு தஞ்சாவூர் இரண்டாம் வகுப்பு மாஜிஸ்ட்ரேட் முன்னிலையில் நிறுத்தப்பட்டார். மாஜிஸ்ட்ரேட் இவரைச் சப் ஜெயிலுக்கு அனுப்பிவிட்டார்.

மறுபடியும் 3-ந் தேதியில் வழக்கு தஞ்சாவூர் அடிஷனல் மாஜிஸ்ட்ரேட் முன்னிலையில் ஆரம்பமாயிற்று. அரசாங்கத் தரப்பில் எட்டு சாட்சிகள் விசாரிக்கப்பட்டார்கள். அரசாங்கத்தரப்பு சாட்சிகளின் வாக்கு மூலங்கள் முடிவடைந்த பின்னர் கோர்ட்டார் ஸ்ரீமான் என். தண்டபாணி பிள்ளையைப்பார்த்து ஏதாவதுசொல்வதாயிருந்தால் சொல்லலாமென்று கூறினர். அப்போது அவர் கூறியதன் சாராம்சம் வருமாறு:—

"நான் பேசியதன் மொழிபெயர்ப்பு சரியாயில்லை. என்னுடைய பிரசங்கத்தின் பயனாய் நேரிடாத சம்பவங்களும் என் பிரசங்கத்தின் காரணமாய் ஏற்பட்டிருக்கின்றன என்று சொல்லப்பட்டிருக்கிறது. நான் ஒரு வாக்கு மூலத்தை ஆஜர்படுத்துகிறேன்."

பின்னர் அவர் கீழ்வரும் வாக்கு மூலத்தைக் கொடுத்தார்.

"நான் ஒத்துழையாக்காரன் ஆவேன். என்னுடைய பிரதிக்ஞை பலாத்காரமற்ற செயல்களைச் செய்வதும், தற்போதைய இந்திய ஆட்சி முறையைத் திருத்துவதற்காகப் பாடுபடுவது; அல்லது அதை மாற்றி விடுவதற்காகப் பாடுபடுவதுமாகும். ஆகையால் என் மீது 124. ஏ. செக்ஷன்படி நடவடிக்கைகள் நடத்துவது சுலபமான காரியமாகும். நான் பலாத்காரத்தைச் செய்யும் படியாய்த் தூண்டினேனென்று அரசாங்கத்தார் ருஜுப்பிக்காமல் என்மீது குற்றஞ் சாட்டுவது அவர்கள் கொடுத்த வாக்குறுதியினின்றும் தவறியதாகும். நான் காங்கிரஸ் வேலையை நிறுத்தி விடமாட்டேன். சிறைவாசத்தை அநுபவிக்கவும் சித்தமாயிருக்கிறேன். என் மீது 153 ஏ. செக்ஷன்படி குற்றஞ் சாட்டப்பட்டிருப்பதை நான் முற்றிலும் மறுக்கிறேன். ஜாதிச் சண்டைகளை உண்டாக்குவது என் விருப்பமல்ல. நான் காங்கிரஸ்காரனும் ஒத்துழையாக்காரனும் ஆவேன். ஆகையால் என்னுடைய முதற்கடமை ஆங்கிலேயர் உள்ளிட்ட எல்லா ஜாதியார்களுக்கும் பரஸ்பர நேச பாவத்தையுண்டாக்குவதேயாகும்."

6-ந் தேதியில் மாஜிஸ்ட்ரேட் ஸ்ரீமான் தண்டபாணி பிள்ளைக்கு ஒரு வருடக் கடுங்காவல் தண்டனை விதித்தார்.

## ஸ்ரீ பரத்வாஜர் வழக்கு

மங்களூர் ஜில்லா காங்கிரஸ் கமிட்டிக் கூட்டுக் காரியதரிசியான ஸ்ரீ பரத்வாஜர் மேல் கி. பு. கோ. 108-வது செக்ஷன்படி தொடுக்கப்பட்ட ஜாமீன் வழக்கு நவம்பர் மாதம் 28-ந்தேதியில் மங்களூர் தாலூக்காசப் டிவிஷனல் முதல்வகுப்பு மாஜிஸ்ரேட் கோர்ட்டில் ஆரம்பமாயிற்று. அரசாங்கத் தரப்பு சாட்சிகள் விசாரிக்கப்பட்டார்கள். கடைசியில் ஸ்ரீ பரத்வாஜர் தம் வாக்குமூலத்தை ஆஜர் படுத்தினர். 29-ந் தேதியில் மாஜிஸ்ட்ரேட் குற்றஞ்சாட்டப்பட்டிருப்பவருக்கு ஒரு வருடக் கடுங்காவல் தண்டனை விதித்தார்.

## சட்டங்களை மீறி நடக்கும் இயக்கம்

### வேலூரில் ஆரம்ப ஏற்பாடுகள்

### காங்கிரஸ் ஊழியர்களுக்குத் தடையுத்தரவு

தமிழ் நாட்டுக் காங்கிரஸ் கமிட்டியின் அங்கத்தினர்கள் 4-ந் தேதியில் வேலூருக்குப் போயிருந்தார்கள். வேலூர் காங்கிரஸ் கமிட்டியார் இவர்களைக் கொண்டு மாலையில் உபந்யாசங்கள் புரிவிக்க ஏற்பாடு செய்திருந்தார்கள். மாலை 4மணிக்கு நிர்வாகக் கமிட்டியார் நடவடிக்கைகளை நடத்திக் கொண்டிருக்கும் போது போலீஸ் உத்தியோகஸ்தர் ஒருவர் கி. பு. கோ 144-வது செக்ஷன்படி பிறப்பிக்கப்பட்ட நோட்டீஸ்களை ஸ்ரீமான்களான சக்ரவர்த்தி இராஜகோபாலாச்சாரியாருக்கும், ஈ. வி. இராமசாமி நாய்க்கருக்கும் டாக்டர் டி. எஸ். எஸ். இராஜனுக்கும் கொடுத்தார்.

கி. பு. கோ. 144-வது செக்ஷன் படி பிறப்பிக்கப்பட்ட நோட்டீஸ்களில் மேற்கூறப்பட்ட கனவான்கள் இம்மாதம் 4-ந் தேதியன்றும் இன்னு மிரண்டு மாத காலம் வரையும் வேலூர் சப் மாஜிஸ்ட்ரேட் அதிகாரத்திற்கு உட்பட்ட எல்லைக்குள் ஒரு விதமான கூட்டத்திலும் பேசக் கூடாதென்று காணப்பட்டிருந்தன.

மாலையில்கூட்டம் நடைபெற்றது. கூட்டத்திற்கு ஸ்ரீமான்களான ச. இராஜகோபாலாச்சாரியார், ஈ. வி. இராமசாமி நாய்க்கர், டாக்டர் ராஜன், திரு. வி. கலியாணசுந்தர முதலியார், ஆரணி சுப்ரமணிய சாஸ்திரியார், மார்க்கம் அய்யர், ஆதி நாராயண செட்டியார், சுப்ரமணிய நாயனர், இராமநாதன், சிங்காரவேலு செட்டியார் முதலியோர் சென்றார்கள். போய்க்கொண்டிருக்கும் போது ஸ்ரீமான்கள் சுப்ரமணிய சாஸ்திரியாருக்கும், மார்க்கம் ஐயருக்கும் தடை யுத்தரவு நோட்டீஸ்கள் வழங்கப்பட்டன. நடைபெற்ற கூட்டத்திற்கு ஸ்ரீமான் என். கிருஷ்ணமாசாரியார் தலைமைவகித்தார். அவர், தலைவர்கள் கைது செய்யப்பட்டாலும் ஜனங்கள் அமைதியுடனிருக்க வேண்டுமென்று வற்புறுத்திப்பேசினர். ஸ்ரீமான் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரும் ஜனங்கள் அமைதியுடன் நடந்துகொள்ள வேண்டுமென்று கூறினர். ஸ்ரீமான்களான எஸ். இராமநாதன், சுப்ரமணிய நாயனர், ஆதிநாராயண செட்டியார் ஆகிய இவர்கள் பேசினர்கள். ஸ்ரீமான் திரு. வி. கலியாணசுந்தர முதலியார், திரும்பவும் தலைவர்கள் செவ்வாய்க்கிழமை யன்று வருவார்களென்றும் அதற்குள் எல்லாரும் அந்நிய நாட்டு ஆடைகளைப் பகிஷ்கரித்துவிடவேண்டுமென்றும் கூறினர். செவ்வாய்க்கிழமையில் கூட்டம் நடத்துவதாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஆனால் போலீஸ் பந்தயங்கள் அதே மைதானத்தில் நடத்த ஏற்பாடு செய்யப்பட்டமையால் கூட்டம் 10-ந் தேதி சனிக்கிழமையன்று நடத்த ஒத்தி வைக்கப்பட்டிருக்கிறது. அக்கூட்டத்தில் ஸ்ரீமான்களான ச. இராஜகோபாலாச்சாரியார் ஈ. வி. இராமசாமி நாய்க்கர் ஆகிய இவர்கள் 'சுதேசியம் என்றால் என்ன?' 'கட்குடியினால் நேரிடும் தீமைகள்?' 'பலாத்கார மற்றவர்களின் கடமையாது?' என்றவிஷயங்களைப்பற்றிப் பேசுவார்கள்.

பின்னர் வந்த செய்தியால் இன்னும் சிறிது நாட்கள்வரை தள்ளி வைக்கப்பட்டிருக்கிறது என்று அறிகிறோம்.

### ஈரோட்டில் சட்டங்களை மீறி நடக்கும் இயக்கம்

ஈரோட்டில் மறியல் வேலை செய்யக் கூடாதென்று தடுக்கப்பட்டிருந்தும், அக்கட்டளையை மீறி நடந்ததற்காகப் பதின் மூன்று பேர் டிசம்பர் 6-ந் தேதியில் ஈரோட்டில் விசாரிக்கப்பட்டார்கள். இப்படியெல்லாம் இருந்துங்கூட மறியல் வேலை தீவிரமாகநடைபெறுகிறது. ஸ்திரீகளும் மறியல் வேலை செய்யத் தயாராகிறார்கள்.

### சேலம்

சேலம் ஜில்லாவைச் சேர்ந்த ஆத்தூர் தாலூக்காவில் இரண்டு மாத காலம்வரை ஸ்ரீமான் கே. வி. சுப்பராவ், வாசுதேவய்யா முதலியோர்கள் மதுவிலக்குப் பிரசாரம் செய்யக்கூடாதென்று ஆத்தூர் தாலூக்கா சப் டிவிஷனல் முதல் வகுப்பு மாஜிஸ்ட்ரேட்உத்தரவுபிறப்பித்துள்ளார்.

### லக்ஷ்மணபுரியில் அடக்குமுறை

நவம்பர் 30-ந் தேதியில் ஷேக்அமீர் ஊதீன் என்பார், பாரபங்கி ஜில்லாவில் கைது செய்யப்பட்டார். லக்ஷ்மணபுரியைச் சேர்ந்த பண்டித ஹராகரன் நாத்மிஸ்ரா என்பார் கோலா எனுமிடத்தில் கைதி செய்யப்பட்டு மூன்றுமாத தண்டனை விதிக்கப்பட்டார். மலியாபாத் கிலாபத் காங்கிரஸ் கமிட்டிகளின் தலைவரான காஜா ஆமத்கானும், அன்வார் ஆமத்கானும், காலிப் ஆலிகான், மகமத்ஸாமன் கர்த், காஸி ஆமத்கான், உஸ்மான் கானிமகமத் சையத்கான், அன்சார் ஆமத்கான் ஆகிய இவர்களும் மலியாபாத்திலும் லக்ஷ்மணபுரியிலும் கைதிசெய்யப் பட்டுள்ளார்கள்.

### அமிர்தசரஸ்

அமிர்தசரஸில் அடக்குமுறை வியாபிக்க, ஜனங்களும் சிறைச்சாலைக்குச் செல்லத் தயாராகிக்கொண்டே போகிறார்கள். அமிர்தசரசில் பல தேசீய வாதிகள் கைதி செய்யப்பட்டு தண்டிக்கப்பட்டு வருகிறார்கள். ஸ்ரீமான் சர்தார் மேடாப் சிங்குக்கு ஆறுமாதக் கடுங்காவல் தண்டனையும் ஆயிரம் ரூபா அபராதமும் விதிக்கப்பட்டது.

## மறியல் வேலை கூடாது

### பம்பாய் அரசாங்கத்தின் அறிக்கை

அமைதியின்மையும் சச்சரவும் நேரிடாமல் மறியல் வேலை நடந்து கொண்டு போகும் வரை, மறியல் வேலையைச் செய்யும் இச்சா சேவகர்களைக் கைதி செய்யப்பட மாட்டாது என்று அரசாங்கத்தார் சென்ற ஜூலையில் நடைபெற்ற சட்டசபை கூட்டத்தில் சொல்லியிருந்தனர். இப்போது மறியல் வேலை செய்வதன் பயனாய் பம்பாயில் மதுபானக் கடைகள் நாசமாக்கப்புட்ட தல்லாமல், குழப்பங்களும் அமைதியின்மையும் நேரிடுகின்றன. ஆகையால் இன்னும் ஆறுமாத காலம் வரை பம்பாய் நகரங்களில் இருக்கும்கடைகளுக்கருகில் மறியல் வேலை செய்யக்கூடாது. குழப்பங்களும் சச்சரவுகளும் ஏற்பட்டால் அந்தந்த பாகங்களிலுள்ள ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டுகளுக்கும் கமிஷனர்களுக்கும் மறியல் வேலையைத் தடுத்துவிட அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

### காக்கினாடா

ஸ்ரீமான்களான எம். அரங்கய்ய நாயுடு, பி. சாம்பமூர்த்தி, இன்னுமநேகர் ஆகிய இவர்கள் 'சாந்திசேனை' என்ற இச்சா சேவகர் படை அல்லது இதைப்போன்ற படைகளைக் கூட்டவும் அப்படையை காக்கினாடாநகரில் ஊர்வலமாக அழைத்து வர உத்தேசித்திருப்பதிலும் அமைதிக்குப் பங்கம் நேரிடுமென்று கருதி காக்கினாடா சப் டிவிஷனல் மாஜிஸ்ட்ரேட்மேற்கூறிய மாதிரி பத்து தினங்கள் வரையிலும் செய்யக்கூடாதென்று கி. பு. கோ 144-வது செக்ஷன்படி கட்டளையிட்டுள்ளார். கடைக்காரர்கள் கடைகளை மூடக்கூடாதென்றும் கட்டளையிடப்பட் டிருக்கிறார்கள்.

### கடப்பை

ராயச்சோட்டி டிபுடி மாஜிஸ்ட்ரேட் ஸ்ரீமான்களான கே. சூரியநாராயண, செந்திவேலுகு, பி. ஹனுமந்தராவ், நவாட் சூரி கோபாலகிருஷ்ண சர்மா ஆகிய இவர்கள் ஒவ்வொருவருக்கும் ஆறு மாதக் கடுங்காவல் தண்டனை விதித்துள்ளார்.

### ஸ்ரீமான் ஸ்டோக்ஸ்

ஸ்ரீமான் எஸ். இ. ஸ்டோக்ஸ் டிசம்பர் 3-ந் தேதியில் அமிர்தசரசிலிருந்து லாகூருக்குச் செல்கையில் வாகாட் ரெயில்வே ஸ்டேஷனில் கைதுசெய்யப்பட்டு ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டின் முன்னிலையில் கொண்டுவந்து நிறுத்தப்பட்டார். டிரைபூன் பத்திரிகையில் இவரால் எழுதப்பட்ட விஷயங்கள் இராஜத்துவேஷத்தையும் ஜாதித்துவேஷத்தையும் கிளப்பக்கூடியனவாயிருக்கின்றபடியால் ஏன் கி. பு. கோ 108-வதுசெக்ஷன்படி இவர் நன்னடக்கையுடனிருப்பதற்காகப் பத்தாயிரம் ரூபா முச்சிலிக்காகவும், 5000 ரூபாயில் வேறு இரண்டு தொகைக்கு ஜாமீனும் கட்டக்கூடாதென்று கேட்கப்பட்டார். ஸ்ரீமான் ஸ்டோக்ஸ் ஜாமீன்கொடுக்க மறுத்துவிட்டார்.

# அரசியல் கைதிகள்

## ஒரு 'சிறைப்பட்சி'யின் அநுபவம்

ஸ்ரீமான். டி. செஞ்சய்யா என்பார் எழுதுவதன் சாராம்சம் வருமாறு:—

இந்தியாவின் நிலைமை- சிறப்பாக அரசியல் நிலைமை அதிகமான மாறுதல் அடைந்துகொண்டே போகிறது. ஒருவன் தன்னை தேசபக்தனென்று சொல்லிக் கொள்ள பயந்துகொண்டிருந்த காலமும் இருந்துவந்தது. இப்போதோ வெனில் எவனும் தன்னைத் தேசபக்தனென்றுசொல்லிக்கொள்ள பயப்படவே மாட்டான். இப்போது ஒவ்வொருவரும் தேசத்திற்கு ஏதாவதொரு நன்மைசெய்ய வேண்டுமென்ற எண்ணத்தையே பெரிதும் கொண்டிருக்கிறார்கள். சிலர் பின்னால் என்ன நேரிடும் என்பதையும் கவனியாமல், தேசத்திற்கு எதுநன்மை என்று தோன்றுகிறதோ அதைச் செய்தே முடித்து வருகிறார்கள். இதனால் அநேகர் சிறைச்சாலைகளுக்கும் சென்றிருக்கின்றனர். சிலர் ஜெயில்களை 'ஸ்ரீ கிருஷ்ண ஜென்ம ஸ்தானம்" என்றும் கூறுகின்றனர்.

* * *

நான் பாங்காக், சிங்கப்பூர் ஆகிய இவ்விரு இடங்களிலுள்ள ஜெயில்களில் இராஜீயக் கைதியாய் இருந்ததல்லாமல் இந்தியாவிலுள்ள பல ஜெயில்களிலும் நான்கு வருட காலம் இராஜீயக் கைதியாய் இருந்துள்ளேன். அதிகாரவர்க்க ஆட்சி முறையில் இராஜீயக் கைதிகள் எம்மாதிரியாய் நடத்தப்படுகிறார்கள் என்பதை இந்தியர்கள்பெரும்பாலும்அறியாமலே இருக்கிறார்கள். ஒவ்வொரு இராஜீயக்கைதியும் கழுத்திலாவது காலிலாவது இரும்பு வளையம் ஒன்றைக் கட்டாயம் மாட்டிக்கொள்ள வேண்டும். உலோகத்தினால் தயாரிக்கப்பட்ட பில்லை ஒன்றை மாட்டிக் கொள்ள வேண்டும். அதில் நம்பர் அச்சிடப்பட்டிருக்கும். ஆனால் ஐரோப்பிய குற்றவாளிகள் இவைகளையெல்லாம் தரித்துக்கொள்ளவேண்டும் என்ற கட்டாயம் இல்லை. இப்படி இருக்க இந்தியர்களை மாத்திரம் ஏன் கட்டாயப்படுத்த வேண்டும்? கைதிகளின் உடையிலேயே நம்பர்கள் அச்சிடப்பட்டிருக்கின்றன. இன்னும் ஏன் உலோகத்தில் அச்சிடப்பட்ட நம்பர் ஒன்றும்கழுத்தில் தாலியைப் போல் மாட்டப்பட வேண்டும்? இராஜீயக் கைதிகள் இவைகளை யெல்லாம் பொருட்படுத்த மாட்டார்கள். இன்னுமதிகமான கஷ்டங்களை வேண்டு மென்றாலும் அநுபவிப்பார்கள். இராஜீயக் கைதிகளை நடத்தும் முறை பெரிதும் அநாகரிகமானதாய் இருப்பதால் அம்முறையை உடனே ஒழித்து விட வேண்டும்.

* * *

இராஜீயக் கைதிகளுக்கு இரண்டு பனியன்களும் ஷர்ட்டுகளும் குல்லாய்களும் கைக்குட்டைகளும் கொடுக்கப்படுகின்றன. மேற் கூறியவைகள் உடம்புமுழுமையையும் மூடத்தக்கனவாய் இல்லை. ஐரோப்பியக் கைதிகளுக்கு ஷர்ட்டுகள், கோட்டுகள், நிஜார்கள், தொப்பிகள், பாதரட்சைகள், துவாலைகள் ஆகிய இவைகள் கொடுக்கப் படுகின்றன. இம்மாதிரியாகவே இந்தியர்களுக்கும் ஏன் கொடுக்கக் கூடாது? நாமும் தோவத்திகள், ஷர்ட்டுகள், கோட்டுகள், தலைக்குட்டைகள், துவாலைகள், பாதரட்சைகள் ஆகிய இவைகளை அணிந்து கொள்கிறோம். ஜெயில்களிலும் நம்மவர்களுக்கு இவைகளெல்லாம் கொடுக்கப்பட வேண்டும். இந்தியக் கைதிகளுக்குக் கொடுக்கப்படும் துவாலைகள், கைக்குட்டைகளேயாகும்.

* * *

இந்தியாவில் பிறவாதவர்கள் அனைவரும் ஐரோப்பியர்களென்றே கருதப்படுகிறார்கள். அலிப்பூர் ஜெயிலில் சீன தேசத்துக் குற்றவாளிகள் இருப்பதைக் கண்டேன். அவர்கள் பாதரட்சைகளையும் தொப்பிகளையும் அணிந்து கொள்ளும்படியாய்க் கட்டாயப்படுத்தப் பட்டார்கள். இந்தியர்கள் பாதரட்சைகளையும் தலைப்பாகைகளையும் அணிந்துகொள்வதிருந்துங்கூட, இந்தியக் கைதிகளுக்கு அவைகள் கொடுக்கப்படுவதில்லை. இது நியாயமா? துணிகளையும் உடம்பையும் சுத்தஞ் செய்து கொள்வதற்காக ஐரோப்பிய கைதிகளுக்கு சோப்புகள் கொடுக்கப்படுகின்றன. ஜெயில்களில் இருக்கும் ஐரோப்பியக் கைதிகளில் பெரும்பாலோர் வீடு இல்லாத பிச்சைக்காரர்களும் சோப்பின் உபயோகத்தை அறியாதவர்களும் ஆவர். இந்திய இராஜீயக் கைதிகளோவெனில் நடுத்தர, செல்வாக்கு பெற்ற இந்திய குடும்பங்களைச் சேர்ந்தவர்கள் ஆவர். இவர்கள் சோப் முதலானவை உபயோகிக்கும் வழக்கத்தைப் பெற்றிருக்கிறார்கள். ஐரோப்பியக் கைதிகள் சோப்புகளை பீடிகளுக்காகவும் சிகரெட்டுகளுக்காகவும் இவைபோன்ற பிற பொருள்களுக்காகவும் விற்று விடுவதை நான் கண்டிருக்கிறேன்.

* * *

இந்தியர்கள் பெரும்பாலும் சட்டில்கள் மீதே தூங்குவது வழக்கம். நான் இராஜீயக் கைதியாய் இருந்துங்கூட, கண்ணனூர் மத்திய ஜெயிலில் எனக்குக் கட்டில் கொடுக்கப்படவேயில்லை. கோயம்புத்தூர் மத்திய ஜெயிலில், எனக்குக்கட்டில்வேண்டுமென்றுசூபரின்டென்டெண்டைக்கேட்டேன். சென்னை இராஜதானியில் கைதிகளுக்குக் கட்டில் கொடுக்கப்படும் விஷயம் சூபரின்டென்டெண்டுகள் வசம் ஒப்புவிக்கப்பட் டிருக்கிறது. கண்ணனூர் மத்திய ஜெயிலில் சிறையாளனாய் இருக்கும் போது நான் என் அறையிலும் வெளியிலும் ஒருவருடத்தில் ஆறு பாம்புகளை அடித்தேன். இப்படி யெல்லாம் இருந்துங்கூட, சூபரின்டென்டெண்ட், கட்டில் எனக்கு அவசியம் என்பதை உணராமலே இருந்துவிட்டார். இதனால் ஜெயில் அதிகாரிகளின் மனப்பான்மை நன்கு விளங்கும். ஒவ்வொரு அரசியல் கைதிகளுக்கும் கட்டில்கொடுக்கப்படவேண்டும் என்ற சட்டம் ஏற்பட வேண்டும். ஐரோப்பிய கைதிகளுக்கோவெனில் கட்டில், கட்டில் மேல் போட்டுக்கொள்ளும் துணி, கம்பளிப் போர்வை ஆகிய இவைகள் கொடுக்கப்படுகின்றன. வீட்டில் எல்லா சௌகரியங்களையும் அடைந்தவர்களும், தன்னலங்கருதாமல் காரியங்களைச்செய்த இந்திய கனவான்களும் அதன்பயனாய் சிறைவாசம் அடைய நேரிட்டால் அன்னாருக்கு அவசியம் வேண்டப்பட்டவைகள் கொடுக்கப்படுவதில்லை. எல்லாரும் ஒரே மாதிரியாய்க் கவனிக்கப் படுவர்என்பதன் பொருள் இதுதானோ? அரசாங்கத்தார் இவைகளை இராஜீயக் கைதிகளுக்குக் கொடுக்க இஷ்டப்படாவிட்டால், சொந்தமாக வைத்துக்கொள்ளலாம் என்றேனும் கூறிவிட்டால் உசிதமாய் இருக்கும்.

* * *

கொடுக்கப்படும் சாப்பாடு பெரிதும் விரும்பப்படாத தாய் இருக்கிறது. ஜெயில் அதிகாரிகள் கைதிகளுக்குப் போதுமான சோறு கொடுக்கிறார்கள். சில ஜெயில்களில் கொடுக்கப்படும் சோறு நல்ல உயர்ந்த அரிசியைக்கொண்டு சமையல் செய்யப்பட்டதாயிருப்பதில்லை. பிற கைதிகளைப் போலவே நானும் எனக்குக் கொடுக்கப்படும் சோற்றைக் கோப்பையில் போட்டு தண்ணீர் விட்டு மிதந்த பின்னர் சாப்பிடுவது வழக்கம். சோற்றில் இரண்டு விதம் உண்டு. ஒன்று நல்லமாதிரியான அரிசியைக்கொண்டு சோறு சமைத்தல்; இன்னொன்று மட்ட அரிசியைக்கொண்டு சமையல் செய்தல். பெரிய உத்தியோகஸ்தர்கள் ஜெயில்களைப் பார்வையிட வரும்போது உயர்ந்த அரிசி சமையல் செய்து போடப்படும். மற்றக்காலங்களில் மட்ட அரிசிச்சோறே போடப்படும்.

* * *

அலிபூர் ஜெயிலில் என்னுடன் கூட வேறு எட்டு அரசியற் கைதிகள் இருந்தார்கள். எங்களுக்குக் கொடுக்கப்பட்ட ரொட்டிகளில் புழுக்கள் இருந்தன. இதைப் பற்றி நாங்கள் ஜெயிலருக்குச் சொன்னோம். அவர் 1800 கைதிகள் ஒன்றும் சொல்லாமல் இருக்க நீங்கள் மாத்திரம் அடிக்கடி பிரியாது செய்கிறீர்கள் என்று கோபத்துடன் கூறினர். அந்த ஜெயிலில் இருந்த அரசியற் கைதிகளில் பெரும்பாலோர் பஞ்சாபியர்களா யிருந்தமையால் எல்லா அரசியற் கைதிகளுக்கும் நல்ல மாதிரியான சாப்பாடு கிடைத்துக் கொண்டு வந்தது. தமிழ் ஜில்லாக்களில் இருக்கப்பட்ட ஜெயில்களில் நல்லெண்ணெய் கொடுக்கப்பட்டது. கண்ணனூர் ஜெயிலில் தேங்காய் எண்ணெய் கொடுக்கப்பட்டது. வங்காளத்தில் கடுகெண்ணெய் கொடுக்கப்பட்டது. பஞ்சாபில் நெய் கொடுக்கப்பட்டது. சிங்கப்பூரில் வெண்ணெய் கொடுக்கப்பட்டது. சிறு வயது முதற்கொண்டே மேற் கூறியவைகளிலெல்லாம் பழக்க மடையாதிருந்தவர்கள் திடீரென சாப்பிட நேர்ந்தால் அதிகக்கஷ்டத்தைக் கொடுக்கும். தமிழ்நாட்டுக் கைதியை மலையாளத்திலிருக்கும் ஜெயிலுக்கு அனுப்பித் தேங்காய் எண்ணெயைப் புசிக்கும்படியாய்க் கட்டாயப்படுத்துவது குற்றமான செயலாகும். ஆந்தர தேசத்தில் இருக்கப்பட்டவன் நெய்யையே யுண்டு காலங்கழித்து வந்திருக்கிறான். அவனைப் பல இடங்களில் பலவிதமான எண்ணெய்களைச் சாப்பிடும்படியாய்க் கட்டாயப்படுத்துவது மனித தர்மத்திற்கே ஒவ்வாததாகும். ஐரோப்பியக் கைதி எந்த ஜெயிலில் அடைக்கப்பட்டாலும் அவனுக்கு வெண்ணெய் கொடுக்கப்படுகிறது. இந்தியர்களுக்கும் ஏன் இம்மாதிரியான முறையைக் கையாளக் கூடாது? ஆந்திர தேசத்துக் கைதிகளை ஆந்திர தேசத்திலும் திராவிட தேசத்துக் கைதிகளைத் திராவிட தேசத்திலும் வைப்பது தான் சாலச் சிறந்ததாகும். இராஜீய விஷயங்களை முன்னிட்டுக் கைதிகளை வெவ்வேறு பாகங்களுக்கு அனுப்பவேண்டியதா யிருந்தால் அவரவர்கள் அநுபோகப் பட்டிருக்கும் உணவையே கொடுக்க வேண்டும். இந்தியர்களில் ஒருவரும் பால், தயிர், வெண்ணெய் ஆகிய இவைகளை உபயோகி யாமலிருக்க மாட்டார்கள் என்று நம்புகிறேன். ஜெயில்களில் இந்தியக் கைதிகளுக்கு மேற் கூறியவைகள் ஒன்றும் கொடுக்கப்படுவ தில்லை. ஐரோப்பியக் கைதி யொருவன் கொலைஞனயிருந்தாலும், திருடனயிருந்தாலும் அவனுக்கு உயர்ந்த மாதிரியான ரொட்டி, வெண்ணெய், கறி, காய்கறி தினுசுகள், பருப்பு, காபி, அல்லது தேத்தண்ணீர் ஆகிய இவைகள் கொடுக்கப்படுகின்றன. லார்டு ரெடிங் இம்மாதிரியாகச் செய்வது நியாயமென்று கருதுகின்றனரா?

* * *

நான் அநேக ஜெயில்களில் அநேக அரசியற் கைதிகளைச் சந்தித்துள்ளேன். அவர்களுக்கு தேசத்தினிடத்தில் இருக்கும் பற்று சொல்லத் திறமல்ல. அவர்கள் தேசத்திற்காக உழைக்கும் விஷயத்தில் என்ன கஷ்டங்கள் நேரிட்டாலும் அநுபவிக்கச் சித்தமாயிருக்கிறார்கள். காபி, சிகரெட்டுகள், மூக்குத்தூள் ஆகிய இவைகளில் பழக்கமடைந்த கைதிகள் ஜெயில்களில் இவைகள் இல்லாத குறையினால் அதிகக் கஷ்டப்படுகிறார்கள். இப்போது அநேகர் ஜெயிலுக்குப் போக அஞ்சாமலே இருக்கிறார்கள். இவர்கள் மேற்கூறிய பழக்கங்களுக்கு இரையாகாமலே இருந்தால் தான் ஜெயில் வாசம் செய்ய நேரிட்டாலும் கஷ்டப்படாமலே இருக்க முடியும். கைதிகள் உத்தியோகஸ்தர்களுக்கு அடங்கி நடக்கும்வரை அவர்கள் தடுக்கப்பட்டவைகளைஉபயோகித்தாலும்உத்தியோகஸ்தர்கள் கண்டு கொள்வதேயில்லை. கைதிகள்—சிறப்பாக அரசியற் கைதிகள்- உத்தியோகஸ்தர்களை எதிர்த்துக்கொண்டால் அப்போது உத்தியோகஸ்தர்கள் தடுக்கப்பட்ட வஸ்துக்களை உபயோகிக்க விட மறுத்துவிடுகிறார்கள். ஆனது பற்றிச் சுதந்தரத்தை மேலானதாகக் கருதுபவர்கள் மேற்கூறிய பழக்கங்களில் ஈடுபடாமல் இருத்தல் நலம்.

* * *

ஜெயில் விதிகளின்படி கைதிகளுக்கு வாரம் ஒரு முறை க்ஷவரம் செய்து கொள்ள உரிமை உண்டு. க்ஷவரம் செய்து கொள்ள கைதிகளுக்கு நாட்டுக் கத்திகளே கொடுக்கப் படுகின்றன. அவைகளைக்கொண்டு க்ஷவரம் செய்து கொள்வது பெருத்த கஷ்டமாயிருக்கிறது. சில சமயங்களில் இக்கத்திகள் மயிரை எடுப்பதற்குப் பதிலாகத் தோலை வாட்டிவிடுகின்றன. ஐரோப்பியக் கைதிகளுக்கோவெனில் உயர்ந்த மாதிரியான கத்திகள் கொடுக்கப்படுகின்றன. அரசாங்கத்தார் கைதிகளை மனிதர்களென்று கருதி அதன்படி நடத்த வேண்டும். ஜெயில் அதிகாரிகள் தங்கள் கடமையைச் சரிவர செய்வதில்லை.

* * *

அரசியற் கைதிகள் படித்தவர்களாகையால், அவர்களுக்குப் புத்தகங்கள் இன்றியமையாதன. ஒவ்வொரு ஜெயிலிலும் பேருக்கு மாத்திரம் புத்தகாலயம் இருந்து வருகிறது. அந்தந்த மாகாணத்திலுள்ள ஜெயில்களில் அந்தந்த மாகாண பாஷைகளிலுள்ள புத்தகங்களே இருக்கின்றன. அலிபூர் மத்திய ஜெயிலில் மாத்திரம் நல்ல புத்தகங்கள் இருக்கின்றன. கிறிஸ்துவ பாதிரிமார்கள் சில ஜெயில்களுக்குப் போந்து கைதிகளுக்குப் புத்தகங்களைக் கொடுப்பது வழக்கம். அதைப் போல நம் தேசத்திய மதப் பிரசாரகர்களும் செய்தல் நலம். கீழ்க்கூறும் விதமாய்ச் செய்தால் கைதிகளுக்குப் படிக்கப் புத்தகங்கள் கிடைக்கும்.

* * *

1. ஒவ்வொரு ஜெயில் புத்தகாலயத்திலும் நல்ல மாதிரியான புத்தகங்கள் ஆங்கிலத்திலும் சுதேச பாஷையிலுமிருக்க வேண்டும். அல்லது எல்லா ஜெயில்களுக்கும் பொதுவாக மத்திய புத்தகாலயம் ஒன்று இருக்க வேண்டும். அவ்விடத்தினின்று அரசியற் கைதிகள் புத்தகங்களைப் பெற்றுக் கொள்ளும்படியாய் ஏற்பாடு செய்ய வேண்டும்.

2. அரசியற் கைதிகளுக்குப் புத்தகங்களைக்கடனுகக்கொடுப்பதற்காக ஒவ்வொரு மாகாணக் காங்கிரஸ் கமிட்டியும்ஒரு புத்தகாலயத்தை வைத்துக்கொள்ளலாம்.

3. ஜெயில் அமைக்கப் பட்டிருக்கும் இடத்திலுள்ள காங்கிரஸ் கமிட்டி, சூபரின்டென்டெண்டுடன் கலந்து கைதிகளுக்குப் புத்தகங்களைக் கொடுக்க ஏற்பாடு செய்ய வேண்டும்.

4. மதப்பிரசாரகர்களும் கைதிகளுக்கு மதஸம்பந்தமான புத்தகங்களைக் கொடுக்க வேண்டும்.

5. ஜனசமுதாயச் சங்கங்களும் மேற்கூறிய வேலைகளைச் செய்ய வேண்டும்.

* * *

இந்திய ஜெயில்களில் அரசியற் கைதிகள் இம்மாதிரியாகத் தான் நடத்தப்பட வேண்டும் என்ற நியதி ஒன்றுமில்லை. வங்காள ஜெயில்களில் சில நிபந்தனைகள் இருக்கின்றன. அரசியற் கைதிகள், தற்போதைய ஆட்சி முறையின் எதிரிகள் என்று ஜெயில் உத்தியோகஸ்தர்கள் கருதுகிறார்கள். அரசியற் கைதிகளை ஜெயிலில் திரிய விட்டுவிட்டால் அவர்கள் மற்றக் கைதிகளையும் கெடுத்துவிடுவார்களென்று ஜெயில் உத்தியோகஸ்தர்கள் கருதுகிறார்கள். ஆகவே அவர்கள் அரசியற் கைதிகளுக்கு, மற்றக் கைதிகளுக்குக் கொடுக்கப்படும் சுதந்தரத்தைக் கூட கொடுப்பதில்லை. வங்காள ஜெயில்களில் அதிகமான அரசியற் கைதிகள் இருப்பதைப் போல் மற்ற ஜெயில்களிலும் இருந்தால், சீர்திருத்தங்கள் ஏற்படும். வங்காளத்தில் அரசியற் கைதிகளுக்குச் செய்து கொடுக்கப்படும் சௌகரியங்கள் யாவும் மற்ற மாகாணங்களிலுள்ள அரசியற் கைதிகளுக்குச் செய்து கொடுக்கப்பட வேண்டும். அரசியற் கைதிகளைப் பெருத்த உத்தியோகஸ்தர்கள் பார்வையிடுதனால் ஒருவித நன்மையும் ஏற்படுவதில்லை. வங்காள ஜெயில்களிலிருக்கும் அரசியற் கைதிகளை வாரத்திற்கொரு முறை அல்லது பத்து தினங்களுக்கு ஒரு முறை கௌரவ மாஜிஸ்ட்ரேட்டுகள் போய்க் கண்டு அவர்களின் குறைகளை விசாரித்து, அதற்காக வைக்கப்பட்டிருக்கும் புத்தகங்களில் எழுதுகிறார்கள். இம்முறையினால் அதிகமான நன்மை ஏற்பட்டுக்கொண்டு வருகிறது.

* * *

சட்டசபை அங்கத்தினர்கள் அரசியற் கைதிகளின் நிலைமை உயர்த்துவதற்காகச் சட்டசபைகளில் போராடவேண்டும். இந்திய அரசியற் கைதிகள் தாய்நாட்டின் சுதந்தரத்திற்காக அநேகவித கஷ்டங்களை அடைகிறார்களாதலால் அவர்களின் செயலை நாம் பாராட்ட வேண்டும். இன்றைய தேதியில் அரசியல் கைதியாய் இருக்கப்பட்டவன் நாளைய தேதியில் எல்லாராலும் பாராட்டப்படக் கூடியமகா வாசியாக மாறுவான். இவ்வுண்மையை வாஷிங்டன், க்ராம்வெல், லெனின், டிவேலரா ஆகிய இவர்கள் நிலை நிரூபித்திருக்கிறார்கள். இம்மாதிரியாகவே அலி சகோதரர்கள், கோபால கிருஷ்ணய்யா, யாகூப் ஹாசன் ஆகிய இவர்கள் ஆவர்கள்.

* * *

கௌரவம் தான் பொது ஜனங்களின் அணிகலம் ஆகும். யார் யாருக்கு கௌரவம் கொடுக்க வேண்டும்? யார் யாருக்கு கௌரவம் கொடுக்கக் கூடாதென்று அறியும் நகர வாசிகளையுடைய தேசந்தான் சிறந்த தேசமாகும்.

# மனிதர்களாகப் பாவிக்கவேண்டும்

மகாத்மா காந்தி 'எங் இந்தியா' பத்திரிகையில் எழுதுவதன் சாராம்சம்:—

மிதவாதிகளுக்கு எழுதிய கடிதத்தைப் பற்றி நான் அதிகமாகச் சொல்லவேண்டியதில்லை. அக்கடிதத்தில் மலபாரில் நடைபெற்ற விஷயங்களைப்பற்றிச் சொல்கையில் ருஜுப்பிக்கப்படாததும் ஒரு தலைச் சார்பானதுமான விஷயங்களைப் பற்றி நான் எடுத்துக் கூறவில்லை. எனக்குக் கிடைத்திருக்கும் செய்திகளிலிருந்து பஞ்சாபில் நடைபெற்ற சம்பவங்களைக் காட்டிலும் கொடுமையான சம்பவங்கள் நடைபெற்றிருக்கின்றன என்று தெரிய வருகின்றது. மலபாரில் நடைபெற்று வருவதாகச் சொல்லப்படும் கொடுஞ் செயல்களில் அதிக நடுக்கத்தைக் கொடுக்கக்கூடியது மாப்பிள்ளைக் கைதிகள் ரெயில் வண்டியில் மூச்சுத்திணறி மாண்டதேயாகும். மாப்பிள்ளை மார்களுக்கு விரோதமாகக் கட்டி விடப்படும் செய்திகளைக் கொண்டு இந்துக்கள் மாப்பிள்ளைமார்கள் கெட்டவர்கள் என்று கருதி விடுகிறார்கள். மாப்பிள்ளைமார்கள் இந்துக்களைக் கட்டாயப்படுத்தி முகம்மதியர்களாக்கியதையும் இந்துக்களுக்கு விளைவித்த வேறு பல கெடுதல்களையும் நான் மறுக்கவில்லை. குற்றமற்ற மாப்பிள்ளைகளுக்கும், குற்றமிழைத்த மாப்பிள்ளைகளின் பெண்டு பிள்ளைகளுக்கும் இன்னல் விளைவிக்க என் ஆத்மா இடங்கொடுக்கவில்லை. கெடுதல் செய்தவர்களையும் சித்ரவதைக்கு உள்ளாக்குவதை என் ஆத்மா விரும்பவில்லை. இம்மாதிரி செய்வது மனிதத்தன்மைக்கு ஒவ்வாதன ஆகும்.

அமைதியாய்க் காரியங்களைச் செய்ய வேண்டுமென்றே நான் கூறுகிறேன். அரசாங்கத்தார் என்ன செய்துகொண்டிருக்கிறார்கள்? அரசாங்கத்தார் ஏன் சரியான பாதுகாப்புக் கொடுக்கக் கூடாத நிலையி லிருக்கின்றனர்? அரசாங்கத்தார் தங்கள் கடமை, பதிலுக்குப் பதில் கெடுதல் செய்வது என்று எண்ணியிருக்கிறார்களா? மாப்பிள்ளைகளையும் அவர்களுக்கு இரையான ஹிந்துக்களையும் தனியே விட்டுவிடுவதுதான் தங்கள் கடமையென்று எண்ணுகிறார்களா?

மாப்பிள்ளைகளை அரசாங்கத்தாருக்கு விரோதமாகக் கிளப்பிவிட்டு இம்மாதிரியான சேஷ்டைகளை ஒத்துழையாக்காரர்களே உண்டாக்கினார்களென்றும் வைத்துக்கொள்ளலாம். அப்படியிருந்தாலும் ... ஒத்துழையாக்காரர்கள் மாப்பிள்ளை...களின் கோபத்தை வளர வைத்துக் கொண்டே போகிறார்களா? அரசாங்கத்தார் குழப்பத்தை அடக்கும் விஷயமாகச் செய்து வரும் காரியங்களுக்கு ஒத்துழையாக்காரர்கள் ஏதாவது தடை செய்கிறார்களா? மாப்பிள்ளைமார்களிடையில் சென்று அவர்களை நல்வழிக்குத் திருப்புவதற்கு அரசாங்கத்தார் ஏன் ஒத்துழையாக்காரர்களை அவ்விடத்திற்கு அனுப்ப மறுக்கின்றனர்? ஒத்துழையாக்காரர்கள் தங்கள் வாக்குறுதியினின்று தவறி துரோகிகளாய்விட்டால் அவர்களை அரசாங்கத்தார் சுட்டுக் கொன்று விடட்டும். இவர்... ...டமிருந்து அரசாங்கத்தார் நன்னடக்கை ஜாமீன் வேண்டுமென்றாலும் பெற்றுக்கொள்ளலாம். அரசாங்கத்தாருக்குச் ...யான வழி இருக்க அவர்கள் வேண்டுமென்றே கெடுதலான காரியங்களை மல...ல் செய்து கொண்டு போவது நல்ல...ல. ...பிரதிநிதிகளின் மேல் தாங்கள் ...பாருக்குச் சென்று சமாதானத்தை ...டுத்துவதாகவும் ஒத்துழையாக்காரர் ...கூறுகிறார்கள். அதையும் அரசாங்...தார் ஏற்றுக்கொள்ளாமல் இருப்பது ...தல்ல.

...த்துழையாக்காரர்களை மலபாருக்கு ...ப்பவேண்டும். அவர்களை மாப்பிள்ளை...ளுடன்கூட கலந்து பேச விட...டும். அப்போது தான் சமாதானம் ...டும். மாப்பிள்ளைகள் தங்கள் வீ... ...த்ச் சரி தவறிய வழியில் உபயோ...லும் நாம் அவர்களைச் சரியான வழி...டத்த வேண்டும்.

...ன்னை இராஜதானியிலுள்ள ஹி... ...ர் அமைதியடைந்து தாங்கள் மாப்... ...கள் விஷயமாகக் கொண்டிருக்... ...கெட்ட அபிப்பிராயத்தை விட்டு ...வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கி... ...சில ஜனங்கள் செய்த தவறுதல் ...க எல்லா ஜனங்களையும் வெறுப்... ...வதென்று இந்து மதம் கூறுகின்... ...இந்துக்கள் மாப்பிள்ளைகளைச் சரி... ...டத்தவில்லை. மாப்பிள்ளைகளைச் ...நடத்தாததன் பயனை நாம் இப்... ...அனுபவித்து வருகிறோம். மாப்...

# சந்நியாசிகள் இராஜீயப் பிரசாரஞ் செய்யலாமா?

II

(ஸ்ரீ விலக்ஷணாநந்தசுவாமிகள் எழுதியது.)

எந்தக் காலங்களிலும் எந்த நாட்டிலும், நமது நாட்டிலும், சுயநன்மையைக் கருதாத குணத்தை இயற்கையிலேயே பெற்றுள்ள பற்றற்ற துறவிகள் தான் தேச சேவை செய்ய முன் வந்திருக்கிறார்கள். சந்நியாசிகள், துறவிகள் என்றால் காஷாய வஸ்திரம், ருத்திராக்ஷம், விபூதி முதலிய சின்னங்கள் அணிந்து கொண்டவர்களல்ல. மற்றோ? மனதினின்று யதார்த்தமாய் யாதொரு பற்றுமின்றிக் கடவுளை அடைய முயற்சி செய்கிறவர்களும் செய்தவர்களும் செய்பவர்களும் செய்து முடித்தவர்களுமே சந்நியாசிகளாவார்கள்.

தேச முன்னேற்றமாகாமல் தேசஜனங்கள் சகலவிதத்திலும் முன்னேற வழியில்லை. அதற்கு முறையே நம் நாட்டின் பூரண அதிகாரம் நம்மிடத்திலே யிருக்க வேண்டும். அப்போது தான் மதமும் தடையின்றி விளங்கும். அதற்குக் கலப்பில்லாத பூர்ண சுயராஜ்ஜியம் வேண்டும். ஆதலால், தேசிய ராஜீய சுதந்தர விஷயமாய்ச் சந்நியாசிகள் பாடுபடுவது ஹிந்து மதவுத்தாரண நிமித்தம் பாடு பட்டதாகவே முடிகிறது. இக்காரணங்களால் சந்நியாசிகள் தேசிய ராஜீயப் பிரசாரஞ் செய்யலாமா? என்ற கேள்விக்குச் சமாதானம் விளங்கி யிருக்குமென்பதிற் சந்தேகமேயில்லை. இதைத் தவிர தற்போதுள்ள மடாதிபதிகளில் முக்கியஸ்தரான சாரதாபீடம் ஜெகத்குரு ஸ்ரீ சங்கராசாரியார் தேச நன்மையின் பொருட்டு ராஜீயப் பிரசாரம்செய்கிறார். மடாதிபதிகளிற் பலர் பாரததேச ஆத்மஞான வீர்ய சக்தியின்றி மூலை முடுக்குகளில் தூங்குகிறார்கள்.

மேற்கூறிய ஆசாரியஸ்வாமிகள், கோவிந்தானந்தர், சத்தியதேவர், சிரத்தானந்தர் முதலிய சுதந்தர ஆத்ம ஞான சந்நியாசிகளையும் போற்றிப் புகழவேண்டும். பின்பற்றி நடக்கவேண்டும். ஆதிகாலங்களில் நமது பாரத தேசத்தில் நெடுங்காலம்வரை நிலைத்திருக்கவேண்டிய தேச நன்மையை உத்தேசித்து, அபாரமான அளவற்ற விசாலமான அழகிய கட்டடங்கள், விஸ்தாரமான அநேக பூமிகள், அளவுக்குமீறிய செல்வங்கள், நானாவித விருதுகள், இவைகளை ஏற்பாடுசெய்து அதில் யாதொரு பற்றுமின்றிய துறவிகளை ஸ்வாதீன மடாதிபதிகளாக்கிவைத்து, மத விஷய போதனைகள் இராஜ்ய நன்மையை உத்தேசித்த இராஜீயப் பிரசாரங்கள் செய்துகொண்டு இருக்க தேசசேவையை நாடி ஆங்காங்கு பிரபலமான பாரதநாட்டு சுதேசமன்னவர்களால் ஏற்படுத்தப்பட்டன.

தற்சமயம் மடாதிபதித் துறவிகள் ஏற்பாடுசெய்த நிலைமையை அடியோடு மறந்து தங்களுடைய உண்மையான சந்நியாச விதியையும் நழுவவிட்டு உலகபோக லோலர்களாய் அழகிய உயர்ந்த காஷாய வஸ்திரங்களை முறையே அணிந்துகொண்டு பற்பல வாசனைத் திரவியங்களைப் பூசி வயிறு நிறையச் சத்தான பல ஆகாரங்களையுண்டு சரீர பாவனையால் தமது சுய நலத்தைப் பாராட்டிக் காமாதி விகாரங்களுக்கு உட்பட்டு வீணாகக் கெட்டுத் தான்றோன்றித் தம்பிரான்களாய்த் திரிகின்றார்கள். இவர்களையெல்லாம் இவ்வாறு துர் நடத்தைகளுக்குச் செல்லாதவாறு அடக்கி ஆதிகால ஏற்பாடுகள் போல் செய்யவேண்டுமானால், நம்மிடம் பூர்ணமான நமது நாட்டின் எல்லாவித அதிகாரமுமிருத்தல் வேண்டும். அதற்குச் சுயராஜ்யமே வேண்டும்.

இதைத்தவிர இந்தியாவிலுள்ள லக்ஷக்கணக்கான சந்நியாசிகளும், ஒருமித்துத் தேசிய நன்மைக்கான பிரசாரஞ் செய்யப் புறப்பட்டு அவ்வாறு அநுஷ்டித்து, அதனால் என்றைக்குக் கடவுள் கிருபையால் சிறைச்சாலைகளில் சந்நியாசிகளாகவே நிரம்பப்போகிறதோ, அன்று தான் சுயராஜ்யம் பெற்ற நாளாகப் போகிறது.

1. ஹிந்துமத விருத்தியின் பொருட்டுப் பல தேசங்கள் சென்று உபந்நியாஸங்கள் செய்துவருவது ராஜாங்க விரோதமாகுமா?

2. அன்னிய மதஸ்தர்கள் நமது மதஸ்தர்களுக்குப் போதித்து வேறு மதங்களுக்கு இழுக்காதவாறு போதித்தல் சட்ட விரோதமாகுமா?

3. இராஜாங்கத்தாரிடமுள்ள யதார்த்தமான குற்றங்களை எடுத்துக்காட்டுவது சட்டத்திற்கு சத்துருத்துவமாகுமா?

4. அமெரிக்க நாட்டுப் பாதிரிகள் இந்தியாவில் செய்யப்போகிற ஹிந்து மத விரோதமான கிருஸ்தவமதப் பிரசாரத்தைத் தடுப்பது இராஜாங்கத் துவேஷமாகுமா?

5. லைசென்ஸ் பெற்று தாசித்தொழில் புரிகின்ற பெண்களிடம் செல்லாதீர்கள் என்று போதித்தல் இராஜாங்கத்திற்குச் சத்துருத்துவமாகுமா?

6. நமது நாடு மிக்க ஏழ்மையுற்றிருக்கின்றது. இத்தருணம் வீணான எவ்விதமான செலவுகளும் செய்யாதீர்களென்று ஜனங்களுக்குப் போதித்தல் ஆங்கில இராஜாங்கத்திற்கு வருத்தத்தை யுண்டாக்குமா?

7. நமது நாட்டிலே விளைகிற பருத்தியைக்கொண்டு நாமே நமது கையால் நூல் நூற்று நாமே வஸ்திரங்களை செய்து உடுத்தவேண்டும். மேற்குத்திசை வஸ்திரங்களைத் தரிப்பதால் நமது நாடு ஏழ்மையடையா நிற்கின்றது என்று போதித்தல் இராஜாங்க விரோதமாகுமா?

8. பஞ்சமஹா பாதகங்களுளொன்றான குடி அடியோடு ஒழியவேண்டிப் போதித்தல் இராஜத்துரோகமாகுமா?

9. எட்டாத கடவுள் ஒருவரைத் தவிர வேறு யாரையும் லக்ஷியம் செய்யாதீர்களென்று பாரத தேச ஜனங்களுக்கு மத சம்பிரதாயப்படி போதித்தல் சட்ட விரோத மாகுமா?

இராஜாங்கத்திற்கு விரோதமாக நடப்பவன் மதத்திற்கும் தெய்வத்திற்கும் விரோதமாக நடப்பவனாகிறான். இராஜத்துரோகி கடவுள் துரோகி என்பது எனது முடிந்த எண்ணம். சாஸ்திர சம்மதமானதும், ஆன்றோர்களால் அங்கீகாரம் செய்யப்படுவதும், ஒழுங்கான அனுஷ்டானங்களைக் கொண்டதும், துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலன தர்மத்தை மேற்கொண்டதுமாகிய தெய்வீக இராஜாங்கத்தை எந்த மனுஷ்யனும் தூஷிக்கமாட்டான். விரோதிக்கவு மாட்டான். எந்த இராஜ்யத்தில் சுய அதிகாரம் கிடைத்திருக்கிறதோ, அந்த இராஜ்யத்தில் தான் மதமும் தடையின்றி விருத்தியாகிறது. மதம் ரெயில் வண்டித் தொடர் போன்றது. இராஜீய சுதந்தரம் இருப்புப்பாதை போன்றது. மத உணர்ச்சியின்றிய இராஜாங்கமும், தேசமும் ஜனங்களும், சுபிக்ஷமான நிலைமையிலிருக்கமாட்டார்கள். சுயராஜ்ய இருப்புப் பாதையின்மீது ஹிந்துமதமென்ற ரெயில்வண்டித்தொடர் ஓடவேண்டும். தற்போது பல வருஷங்களாய் நமக்கு இருப்புப் பாதையின்றிய ரெயில்வண்டித் தொடர் மட்டு மிருக்கின்றது.

தற்போது நிலைமையைக் குறித்துப் பாரத நாட்டிலுள்ள சந்நியாசிகளும் இருஹஸ்தர்களும் மற்றையோர்களும் தேசிய மத விஷயத்திற் பலமா யிபேட்டு யாதொரு பயமுமின்றித் தேச சேவைசெய்ய முன்வருவார்களென்று எதிர்பார்க்கிறேன். இருஹஸ்தர்களைக் காட்டிலும் சந்நியாசிகள் தான் வெகு பலமாக முன்வரவேண்டுமென்ற சந்நியாஸ முறைமையுடன் வேண்டுகிறேன்.

பிள்ளைகளுக்கு ஜனங்கள் அநுதாபம் காட்டக்கூடாதென்று நாம் கூறக்கூடாது. மாப்பிள்ளைமார்கள் செய்த கெட்ட செயல்களினால் இஸ்லாமிய மதத்திற்குக் கெட்ட பேர் வந்தது. மாப்பிள்ளைமார்களிடத்தில் வன்மம் காட்டியதற்காக இந்து மதமும் இஸ்லாமிய மதம் அடைந்த கதியையே அடைந்திருக்கிறது. விபசாரம் செய்வதும் கொலை செய்வதும் பெருத்த பாபங்களாகும். தூர்த்தனையும் கொலைஞனையும் சித்ரவதைக்கு உள்ளாக்கி அவனுடைய பெண்சாதி பெண்களைக் கற்பழித்து, அவன் குடும்பத்தைச் சேர்ந்த மற்றவர்களையும் கொலை செய்து விடுவது மேற்கூறியதைப் போலவே பெருத்த பாபமாகும். இந்துக்கள் மாப்பிள்ளைகளுக்குக் கெடுதல் செய்யவேண்டுமென்ற எண்ணத்தினால் டையர் ஓட்வியர் ஆகிய இவர்கள் செய்த காரியங்கள் சரியானவையென்று ருஜுப்பிக்காமல் இருப்பார்களாக. மாப்பிள்ளைமார்களுக்குக் கெடுதல்களை விளைவித்துக்கொண்டே போனால், சர் மைகல் ஓட்வியர், ஜெனரல் டையர் ஆகிய இவர்கள் செய்த செயல்களை ஆதரிக்கிறவர்கள் ஆகமாட்டோமா? மலபார் சச்சரவை நிலைநிறுத்துவதற்காக அரசாங்கத்தார் இந்துக்களின் கோபஉணர்ச்சியை அதிகப்படுத்தி விட்டார்களென்று நான் கருதுகிறேன். மலபாரிலுள்ள இந்துக்களும் சென்னையிலுள்ள இந்துக்களும் ஜாக்கிரதையாய் இருக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

# ஸ்ரீமான் ஜான்சனின் நற்சாட்சிப்பத்திரம்

மகாத்மா காந்தி, எங் இந்தியா பத்திரிகையில் எழுதுவதன் சாராம்சம்;—

கீழ்வரும் விஷயம் ஸ்ரீமான் பூவனக்கால் ஜான்சனிடமிருந்து கிடைத்ததைக் கண்டு நான் ஆச்சரியப்பட்டேன். நான் ஸ்ரீமான் ஜான்சனைப்பார்க்க வேண்டுமென்று எண்ணங் கொண்டிருந்தேன். ஆனால் எங்களின் நிகழ்ச்சி முறைகள் அம்மாதிரி செய்வதற்கு இடங்கொடுக்கவில்லை. நாம் மதுவிலக்குக்காகச் செய்யும் வேலையைப் பாராட்டி ஸ்ரீமான் ஜான்சன் எழுதியிருப்பது நமக்கெல்லாம் திருப்தியைக் கொடுக்கும்.

ஸ்ரீமான் ஜான்சன் எழுதிய கடிதம் வருமாறு:—

"எனதன்பார்ந்த காந்தி,

நான் இப்போது உங்கள் தேசத்தைவிட்டுக் கடலில் பிரயாணஞ்செய்து கொண்டிருக்கிறேன். ஆனால் என் மனமெல்லாம் தாங்கள் இந்தியாவில்—அதன் மூலமாய் உலகத்திற் கெல்லாம்—மதுவிலக்குப் பிரசாரம் செய்து வருவதிலேயே நாடியிருக்கிறது.

உலகத்தில் கடந்த இரண்டு ஆண்டிற்குள் ஒரு மனிதனும் செய்யக் கூடாத அவ்வளவு வேலையைத் தாங்கள் மதுவிலக்குப் பிரசாரத்திற்காகச் செய்துள்ளீர்கள் என்பது வெளிப்படையாகும்.

இக் கடிதத்தில் எழுதியிருப்பதையே தங்களுக்கு நான் இந்தியாவில் இருந்த காலையில் நேரில் கண்டுசொல்ல சமயம் நேரிடாததற்காக வருந்துகிறேன். நான் இந்தியாவிலிருந்த போது தங்கள் அருமை மனைவியாரையும், சகோதரரையும் கண்டு சம்பாஷிக்கும் பாக்கியத்தைப் பெற்றேன். அவர்களுக்கு என்னைப் பற்றிக் கூறுங்கள்"

நண்பன்,
டப்ளியு. இ. ஜான்சன்.
கடல், 19—11—21.

நான் அபூர்வமான வேலைகளை மதுவிலக்குக்காகச்செய்ததாக ஸ்ரீமான் ஜான்சன் கூறுகிறார். அவர் நினைப்பதைப்போல் நான் பிரமாதமாய் ஒன்றையும் செய்து விடவில்லை. மதுவிலக்குப் பிரசாரத்தைச் செய்ய இரண்டு வருடங்கள் கூட ஆகவில்லை. பேர் ஊர் இல்லாத அநேக பிரசாரகர்கள் மதுவிலக்கைத் தங்கள் மதக்கடமையாகக் கொண்டு உழைத்து வந்தார்கள். அவர்களுக்கே எல்லாப் பெருமையும் சேரவேண்டும். பம்பாயில் மதுபானக்கடைகளைக் கொளுத்தியதைப்போல் செய்து மதுவிலக்குக்குக் கேடு சூழச்செய்யக் கூடாதென்று நான் கூறுகிறேன். கூடிய சீக்கிரத்தில் இந்தியாவில் மதுபான வழக்கம் தானாகவே ஒழிந்துவிட வேண்டுமேன்று நான் நம்புகிறேன்.



# கிழக்காப்பிரிக்கா இந்தியர்கள்

ஸ்ரீமான் ஆண்ட்ரூஸ் கூறும் விவரம்

கிழக்காப்பிரிக்காவினின்றும் திரும்பி வந்திருக்கும் ஸ்ரீமான் ஆண்ட்ரூஸ் கிழக்காப்பிரிக்கா இந்தியர்கள் சம்பந்தமாகக் கூறுவதாவது:—

நான் 1919-ம் வருஷம் நவம்பர் மாதம் கிழக்காப்பிரிக்காவுக்குச் சென்று திரும்பி வந்த பின்னர் அவ்விடத்திலுள்ள இந்தியர்கள் பெருத்த அபிவிருத்தியடைந்திருக்கிறார்கள். செல்வ நிலையிலும் அவர்கள் முன்னிருந்ததைக் காட்டிலும் சற்று உயர்ந்தே இருக்கிறார்கள். நெய்ரோபியில் கல் வீடுகள் அதிகமாகப்பெருகியிருக்கின்றன. தாங்கநயாகாவில் ஜர்மானியர்களின் சொத்துக்கள் விற்கப்பட்டபோது அவைகளில் பெரும்பாகத்தை இந்தியர்களே விலைக்கு வாங்கிக் கொண்டார்கள். கென்யாவிலிருக்கும் இந்தியர்களும்உகாந்தாவிலிருக்கும் இந்தியர்களும் சமூக அபிவிருத்தியில் அதிகமான முன்னேற்றம் அடைந்திருக்கிறார்கள். கல்வி அபிவிருத்தியிலும் இந்தியர்கள் முன்னேற்றம் அடைந்திருக்கிறார்கள். பெண் கல்வி விஷயமாகவும் சிரத்தை காட்டப்பட்டு வருகிறது. ஒவ்வொரு மதக் கட்சியாரும் தங்கள் தங்கள் மதத்தைச்சேர்ந்த பிள்ளைகளின் முன்னேற்ற விஷயத்தில் கவலை செலுத்தி வருகின்றனர். ஒவ்வொரு மதக் கட்சியாரும் சச்சரவு செய்யாமல் ஜன சமுதாய வேலைகளை அபிவிருத்தி செய்து கொண்டு போகின்றனர். எல்லா மதத்தைச் சேர்ந்தவர்களும் அந்நியோந்யமாய் சண்டை சச்சரவு செய்யாமல் வாழ்ந்து வருகிறார்கள்.

1921-ம் வருஷம் ஜுலை மாதத்தில் லண்டனில் கூடிய ஏகாதிபத்ய மகாநாட்டில் நிறைவேற்றப்பட்ட குடிமக்களின் உரிமையைப் பற்றிய தீர்மானத்தைக் கொண்டு இந்தியர்கள் அரசியல் விஷயங்களில் நம்பிக்கை கொண்டிருக்கிறார்கள். நிறவித்தியாசம் காட்டப்பட்டு வருவது தான் கிழக்காப்பிரிக்காவில் இருந்து வருகிறது. ஐரோப்பியர்கள் எல்லா வழிகளிலும் இந்தியர்களை அப்புறப்படுத்திவைக்க வேண்டு மென்கிறார்கள். இந்தியர்கள் நிறத்தைக்கொண்டு ஒரு ஜாதியாரை அப்புறப்படுத்தி வைக்கக் கூடாதென்று கூறுகிறார்கள். இவ்விஷயம் தான் இந்தியர்களுக்குத் துன்பம் விளைவிக்கக்கூடியதா யிருந்து வருகிறது. நிற வித்தியாசம் பாராட்டப்பட்டால் தங்களுக்கும் தங்கள் சந்ததியார்களுக்கும் அவர்களின் சந்ததியார்களுக்கும் அதிகமான பாதகம் உண்டாகிறதென்று இந்தியர்கள் கருதுகிறார்கள். ஐரோப்பியர்களும் இந்தியர்களும் இவ்விஷயம் சம்பந்தமாக சமரசமான ஒரு முடிவுக்கு வருவார்களென்று எண்ணுவதற்கில்லை. ஒரு ஜாதியாரை நிறம் காரணமாக ஒதுக்கி வைப்பது கொடுமையான செயலாகும். இந்தியாவில் நாம் இதைப் பார்த்திருக்கிறோம். தீண்டாமை என்பது எந்த ரூபமாய் இருந்தாலும் கொடுமையான செயலாகும்; மதத்திற்கு விரோதமானதாகும்.

நான் கிழக்காப்பிரிக்காவில் இருந்த காலையில் ஜன சமுதாய வேலைகளிலும், மத சம்பந்தமான வேலைகளிலும், கல்வி சம்பந்தமான வேலைகளிலும் ஈடுபட்டிருந்தேன். ஒவ்வோர் இடத்திலும் இம்மாதிரியான வேலைகளைச் செய்கையில் எனக்குப் ...பாதிய பக்கபலம் இருந்துவந்தது. நான் ...ழக்காப்பிரிக்காவில் ஆண்களையும் ஸ்திரீ...ளையும் கண்டு சம்பாஷித்தேன். நான் ...நக மாதர் கூட்டங்களில் பேசினேன். ...ான் அப்துல் ரசூல் அலாடினா விஸ்... என்ற முகம்மதிய கனவான் ஒருவர் ...லட்ச ரூபா செலவிட்டு மொம்பாஸா... ...ல்விச்சாலை யொன்றை ஏற்படுத்தி...ர். இவ்வுயர்தர பள்ளிக்கூடம் ...? முதல் தேதியில் திறக்கப்படும். ...ளிக்கூடத்தின் மூலமாய் கல்வி ...திகமாகப் பரவ ஏதுஉண்டு.

...உகாந்...தாவிலுள்ள ஹிஞ்சா என்ற இடத்...தில் ஸ்ரீம...ான் மதுரா தாஸ் நகிபாய் என்ற இ...ந்தியக் கனவான் வாசகசாலையொன்றை...யும் புத்தகாலயம் ஒன்றையும் ஏற்படுத்தியு...ள்ளார். இவர் பள்ளிக்கூடம் ஒன்றையும் ... ஏற்படுத்த உத்தேசித்துள்...ளார். இந்...தியர்களின் பணத்தைக்கொண்ட பள்ளி...க்கூடக் கட்டிடமொன்று அமைக்கப்பட்...டுள்ளது. இவைகளெல்லாம் நான் 1919-ம் ...ஆண்டில் திரும்பி வந்ததற்குப் பின்னர் ஏ...ற்பட்டவைகளாகும்.

ஐரோப்பியர்...களின் மனோ பாவம்

இந்தியர்கள் ... உரிமைகள் விஷயமாக ஐரோப்பியர்கள் ... அதிகமான தகராறு செய்கிறார்கள். இ...ந்தியர்களை அப்புறப்படுத்தி வைக்க வே...ண்டுமென்ற எண்ணத்தையேஐரோப்பியர்கள்பெரிதும் கொண்டிருக்கிறார்கள். இந்தியர்களுக்கு, ஐரோப்பியர்களுக்கிருக்கும் உரிமைகள் கொடுக்கப்பட்டு விட்டால் தாங்கள் ஆயுதம்கொண்டு எதிர்க்கப் போவதாக அடிக்கடி ஐரோப்பியர்கள் பயமுறுத்துகிறார்கள். இந்தியர்களுக்கு ஐரோப்பியர்களுக்கிருக்கும் உரிமைகள் கொடுக்கப்பட வேண்டுமென்பதன் சம்பந்தமாக நியமிக்கப்பட்ட கமிட்டியின் தலைவராய் குடியேற்ற நாடுகளின்மந்திரியான ஸ்ரீமான்வின்ஸ்டன் சர்ச்சில்லே விளங்கினார் என்பதை இச்சந்தர்ப்பத்தில் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். கெனியாவும் உகாந்தாவும் குடியேற்ற நாட்டு மந்திரியின் நேரான பார்வையில் இருப்பதால் ஒரு முடிவைச் செய்ய வேண்டியவரும் அவரேயாவர். இக்காரணம் பற்றியே ஐரோப்பியர்கள் ஆயுதம் தாங்கி எதிர்ப்பதாக அடிக்கடி பயமுறுத்துகிறார்கள்.

ஐரோப்பியர்களின் பயமுறுத்தல்களுக்கு ஸ்ரீமான் வின்ஸ்டன் சர்ச்சில் இணங்கிவிட்டால்பரஸ்பர உடன்படிக்கையின்படி இந்தியா கிழக்காப்பிரிக்காவுக்கும் தென் ஆப்ரிக்காவுக்கும்பதிலுக்குப்பதில் செய்து காட்ட வேண்டியதேயாகும். அம்மாதிரியான சம்பவம் பெரும்பாலும் நிகழாது.

70-வருடகாலமாக உலகப்பிரசித்தி பெற்றது.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 4-பலம் | 0 | 13 | 0 | தபாற் | ஏஜண்டுகள் தேவை. |
| 10 ,, | 1 | 10 | 0 | செலவு | விலாசம் விபரமாக எழுதவும் |
| 20 ,, | 2 | 6 | 0 | உள்பட | பெரிய ஆர்டர்களுக்கு ரெயில்வே ஸ்டேஷனைக் குறிக்கவும். |

ஷண்முகம் மூக்குத்தூள்

உலக முழுவதும் பிரசித்தி பெற்றது.

ஷண்முகம் மூக்கு... கம்பெனி லிமிடெட்

...) பாக்சு, 140, மதராஸ்.



அருமையான நூல்கள்!

புதிய புஸ்தகங்கள்!!

திரு. வி. கலியாணசுந்தர முதலியார் எழுதிய நூல்கள்

| | ரூ. | அ. |
|---|---|---|
| மனிதவாழ்க்கையும் காந்தியடிகளும் | 0 | 8 |
| தேசபக்தாமிர்தம் ... ... | 1 | 0 |
| பஞ்சாப் குழப்பம், முதலியாரின் முகவுரையுடன் கூடியது. (சில பிரதிகளே உள்ளன) ... | 0 | 12 |

தங்கமெடல்பெற்ற வடூவூர்-K. துரைசாமி ஐயங்காரின் சிறந்த துப்பறியும் நாவல்கள்.

| | |
|---|---|
| பாலாமணி அல்லது பக்காத் திருடன் ... .. | 2—0—0 |
| மங்கையர் பகட்டு ... | 0–12—0 |
| வித்தியாசாகரர் .. ... | 1—4—0 |
| மேனகா இரண்டுபாகங்களும் | 3—0—0 |
| இராஜேந்திர மோகனா ... | 0–12—0 |
| வசந்தமல்லிகா ... | 1—8—0 |

வேறு பல துப்பறியும் நாவல்களும் கிடைக்கும். உடனே கியாட்லாக்குக்கு எழுதுங்கள்.

திலகர் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.

# காஞ்சீபுரம்

## ஜவுளிகள்.

புதியதினுசு! கெட்டிச்சாயம்!!

ஸ்பெஷலாய் எங்கள் கம்பெனியின் கைத்தறிகளில் தயாரானது. தினசரி துவைத்து உடுத்த மிகவும் சிரேஷ்டமானது. 4 முழத்திற்கு மேல் அழகிய பெங்களூர் பட்டு முந்தாணியும் பட்டுக்கரையுமுடையது.

| | | | | |
|---|---|---|---|---|
| சாதா கருப்பு உடல் | 18 x 2½ | 14 | 0 | 0 |
| மேகவர்ண உடல் | 18 x 2½ | 15 | 0 | 0 |

அழகிய பெங்களூர் தலப்புள்ள தமயந்தி, சகுந்தலா முதலிய உயர்ந்த பட்டு சேலைகளும், ரவிக்கைகளும், வேஷ்டிகளும் கிடைக்கும். கியாட்லாக் இனாம்.

விட்டல் அண்டு கம்பெனி,
காஞ்சீபுரம்.

## 7-ம் வருட ஆரம்பம்.

“ஆனந்தபோதினி” என்னும் மாதச் சஞ்சிகைக்கு ஏழாவது வருஷம் (ஆடிமீ) பிறக்கப்போகிறது. தமிழ்நாட்டில் தலைமைப் பெற்று விளங்குவதும் அதிக சந்தாதாரரை யுடையதும் இதுதான். வருஷ சந்தா ரூ. 1.

வெளிநாடுகளுக்கு ரூபா, 1—4—0.
மாதிரி சஞ்சிகை இனாம்.

“ஆனந்தபோதினி” ஆபீஸ், மதராஸ்.

## மஹாத்மா காந்தி

திருவுருவமமைத்த

எழுதும் கடிதத்தாள் கட்டு.

எக்காலத்தும் மஹாத்மா தரிசனம்

அழகான கலரினல் ரூபாயளவில் மஹாத்மாவின் திருவுருவமும், வந்தேமாதரம் எனும் திருமந்திரமும், பெயர், இடம், தேதி குறிக்க வசதியாகவும் அச்சடித்து 100 தாட்களைச் சேர்த்து பின்புறம் அட்டை பைண்ட் செய்து தயாரித்த கட்டு 1-க்கு அணா 10. கட்டு 12-க்கு ரூ. 6. (வி. பி. பிரத்தியேகம்)

காந்தி படத்துடன் உமது பெயர் விலாசம் அச்சடித்து 1000. 10-பாட்களாக பைண்ட் செய்து தர ரூ. 8-8-0 அனுப்பினால் 1வாரத்தில் யாதொரு செலவுமின்றி அனுப்புவோம்.

PEARL PRESS,
41, Broadway Madras.

இவ்வருஷ காங்கிரஸ் சபாநாயகரும் வங்காளத் தலைவருமான

ஸ்ரீ சித்தரஞ்சன தாஸரின்

ஜீவிய சரிதையும் உபன்யாசங்களும் ஸ்ரீமான் கிருஷ்ணசாமி சர்மா எழுதியது.

விலை அணா 12. தபாற்கூலி வேறு.

மகாத்மா காந்தியடிகள் நூலின் மொழிபெயர்ப்பு.

ஆரோக்யவழி அணா 12.
இந்திய சுயராஜ்யம் அணா 12.

வி. நாராயணன் கம்பெனி,
புத்தகவியாபாரிகள்,
4, கொண்டிசெட்டி வீதி, சென்னை.

## நல்ல லாபம்!

## நல்ல லாபம்!!

## நீங்கள்

எங்களுடைய வெண்பட்டு வேஷ்டிகளை வாங்க மறந்து விடாதீர்கள். நீங்கள் போடும் பணத்துக்கு மோசமில்லை. நீடித்து உழைக்கக்கூடியது. சலவைக்குப் பலம் செய்வதோடு அழகாகவும் நைசாகவு மிருக்கும்.

2½-கெஜம் நீளம் 44-இஞ்சு அகலம் அழகான கரைகளுடன் கூடியது. விலை ரூபா 10-8-0.

3-கெஜம் டை மாதிரி விலை ரூபா 12-8-0.

கே. எஸ். முத்தையா அண்டு கம்பெனி,
சில்க் ஹவுஸ், காசி. BENARES CITY.
மதராஸில் எங்கள் கிளை ஆபீஸ் (188, கோவிந்தப்ப நாயக்கன் தெரு,) மேற்படி ரகங்கள் கிடைக்கும்.

## மானிட கடியாரம்

அஜீரணம், மலச்சிக்கல், பசியின்மை, ஞாபகமின்மை, பலஹீனம், நரம்புத் தளர்ச்சி முதலிய வியாதிகளால் சீர்கெட்ட மானிட சரீரமென்னும் கடியாரத்தைச் சீர்திருத்தவேண்டின்

## மதனமஞ்சரி மாத்திரைகள்

40 மாத்திரைகளடங்கிய டப்பி விலை ரூ. 1. இதனை புபயோகித்து விலையும் தபாற்செலவு மில்லாமல்

இனம்! இனம்!! இனம்!!!

அனுப்பப்படும் 100 பக்கங்கள் கொண்ட

## வைத்திய வித்தியா

என்னும் புத்தகத்தை வாசிக்கவேண்டும்.

ராஜவைத்திய நாராயணஜீ கேசவஜீ,
27, சீனபஜார் ரோட், மதராஸ்.

சுதேசியமானது! உபயோகமானது!!

# அமிர்தாஞ்சனம்

## எல்லா நோய்களுக்கும் சித்தௌஷதம்

தலைநோய், முதுகுநோய், இடுப்புவலி, மார்ச்சளி, சைத்தியம், கீல்பிடிப்பு, இருமல், ஒத்தைத் தலைநோய், வீக்கம், சுளுக்கு முதலான நோய்களுக்கு திவ்யாமிருதம். டப்பி 1-க்கு 0—10—0. டஜன் 1-க்கு 6— 0—0.

| படை மருந்து | பற்பொடி | மோஹினி தைலம் |
|---|---|---|
| டப்பி 1-க்கு 0—6—0 | டப்பி 1-க்கு 0—2—0 | டப்பி 1-க்கு 0—12—0 |

அமிர்தாஞ்சனம் டிபோ, மதராஸ், பொம்பாய்.

# மின்சாரரசம்

ரிஜிஸ்டரான டிரேட்மார்க்

REGISTERED TRADE MARK

மானிடர்களுக்குண்டாகும் வாத, பித்த, சிலேஷ்ம ரோகங்கள், எனவே சகல வியாதிகளையும் யாவரும் அதிசயிக்கும் வண்ணம் நிவர்த்திக்கும் அபூர்வ சக்தி வாய்ந்த தேவாமிர்தம் போன்றதென உலகெங்கும் பிரசித்தி பெற்றோங்கும் அவுஷதம் இது ஒன்றே. இந்தியா, பர்மா, சிலோன், பினங், சிங்கப்பூர், மலாக்கா, தென் ஆபிரிக்கா இந்து சைனு, முதலிய பல தேசங்களிலிருந்து கணக்கற்ற நற்சாக்ஷி பத்திரங்கள் பெற்றுள்ளது. உண்மை விளங்க ஒரே முறை பரீக்ஷியுங்கள்!

எச்சரிக்கை:—முன் சேலம் ஆர். கிருஷ்ண அண்டு கோ., என்னும் விலாசத்தார் இந்த மின்சார ரசத்தை விற்று வந்த பாத்தியதையை 7-2-21 ந் தேதியிலிருந்து ரத்து செய்துவிட்டோம். ஆகவே அவர்கள் இனி ஏதாவது மருந்து விற்றால் அது டாக்டர் பி. வரதராஜுலுநாயுடு அவர்களின் மின்சார ரசமல்ல. இதில் ஏமாற்றமடையாமலிருக்குமாறு அசல் மின்சார ரசம் விரும்பும் எல்லா நண்பர்களும் எச்சரிக்கையாய் தாங்கள் வாங்கும் ஒவ்வொரு புட்டியின் பேரிலும், பார்ஸலின் பேரிலும் மேற்கண்ட ரிஜிஸ்டரான டிரேட்மார்க் உள்ளதா என்று கவனிக்க வேண்டுகிறோம்.

புட்டி 1-க்கு விலை ரூபா 2. தபால் சார்ஜ் பிரத்தியேகம்

தேவைக்கு அடியில் கண்ட விலாசத்திற்கு எழுதுங்கள்:—

மின்சார ரசம் கம்பெனி,
சேலம், (தென் இந்தியா)

தந்தி விலாசம்—ரசம் கோ.
Rasam Co.

## தபால் செலவு இல்லை

எங்களின் ரோம சங்காரி தைலம் உபயோகிப்பதனால், தேகத்தில் எந்த இடத்திலிருந்தாவது ரோமங்களை இரண்டு நிமிஷத்தில் நீக்கும் உபயோகியுங்கள்:

புட்டி 1-க்கு ரூபா 1—0—0.

ஏஜண்டுகள்:—

அன்னபூரண ஸ்டோர்ஸ்,
பார்க்டவுன், மதராஸ்.

## சீவகாருண்ய ஒழுக்கம்

இது ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகளால் எழுதப்பட்டது. இதில் உயிர், உலகம் இவற்றைப் பற்றியும், உயிர்களிடத்து செலுத்தவேண்டிய கருணையைப்பற்றியும் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது. இது படிப்போர் மனங் களிக்குருக் தன்மையிலெழுதப்பட்டுளது. விலை அணா 4.

“நவசக்தி” ஆபீஸ்,
இராயப்பேட்டை, சென்னை.

## அரிய புத்தகங்கள்

| | அணா | | அணா |
|---|---|---|---|
| கௌரீமணி | 8 | லார்ட் லின்டன் | 4 |
| கீதமஞ்சரி | 8 | சரோஜா | 5 |
| ராஜா அமீர்சிங் | 8 | கனிஷ்கி | 5 |

தபாற்கூலி பிரத்தியேகம்.

எம். கல்யா அண்ட் சன்ஸ்,
மயிலாப்பூர்.

## விலாஸம் தேவை.

வாழ்க்கை இன்பம், காதற்பெருக்கு பரவச முதிர்ச்சி, புது ஊக்கம், தேகாரோக்கியம், தீர்க்காயுள், சந்தானபாக்கியம் முதலானவைகளை விரும்புவோர் எங்கள்

## ரகஸ்ய ரத்னம்

என்னும் புத்தகத்தை வாங்கி வாசியுங்கள் விலையில்லை. தபாற் செலவுக்கு மாத்திரம் அரையணா ஸ்டாம்பு அனுப்பினால் மறு தபாலில் வந்து சேரும்.

அமிர்தம் அண்டு கோ.,
தபாற் பெட்டி 203, மதராஸ்.

## சுவர்ண ரத்னுகரம்

ஆயுர்வேத பாஸ்கர, "சி. த சுப்பிரமணிய பண்டிதரவர்கள்" குமாரர் கவர்ன்மெண்ட் ஆயுர்வேதிக் அண்டு யுனனி மெடிகல் கமிட்டி மெம்பருமான ஆயுர்வேத டாக்டர் பண்டிட் C. T ஆறுமுகம்பிள்ளையவர்களால் வெளியிடப்பட்டது.

மண்டூகமகரிஷி என்னும் "தேரையசித்தரின்" முறைப்படி சுமார் 150 வருஷ காலங்களாக அனுபவத்தில் வருபவை.

இவர்களால் சாஸ்திரோக்தமாக கைபாகம், செய்பாகம், தீக்ஷாபாகம், தவறுமல் மிக்க உயர்தர முறையில் சரீரப் பிரயாசையுடன் பணவிரயம் பாராது முடியப்பெற்றது.

இது தங்கம், முத்து, பவளம், அப்பிரகம், தாம்பிரம், அயகாந்தச் சத்து முதலியவைகளின் பஸ்பசெந்தூரங்களையும், மகா சஞ்சீவி மூலிகைச் சத்துக்களையும், பழரசங்களையுங் கூட்டி, காலதேச தேகபேத பத்திய மன்னியில் குழந்தைகள் முதல் வயோதிகர்கள் வரையிலும், உருசியுடன் உண்ணத் தக்கதாகத் தயாரிக்கப்பட்டது.

இதனுல் மகா குஷ்டப்படைகள், ஆருத விரணங்கள், தீராதக்ஷயம், சுவாசகாசம், காசம், கண்டமாலை, யோனிப்புற்று, இலிங்கப்புற்று. தீராதவெள்ளை, கிரந்தி, புண்கள், நாக்குண்ணி, மூக்குண்ணி, மார்பாணி, மூலம், பவுத்திரம், கன்னப்பிளவை, பக்கசூலை, குன்மம், மகோதரம், சோகை, பாண்டு, நீர்க்கட்டு, நீரிழிவு, தீராத சூதகவாயு, கருப்பையின் புரட்சி, மலட்டுரோகம், சந்தானமின்மை, மேக சுரங்கள், மண்டைக்குத்து, கைகால் பிடிப்பு, அண்டவாதம், பார்சவாதம், தாது நஷ்டம், பலஹீனம், இரத்தக்குறைவு, முதலிய அநேக ரோகங்கள் பரிசுத்தமாகத் தீரும். இது மேற்கூறிய நோய்களையும், இன்னும் பல ரோகங்களையும் தீர்த்து மிகவும் பிரசித்தியடைந்து அநேகம் கௌரவமான நற்சாக்ஷிப் பத்திரங்கள் பெற்றது. உத்தரவாதமுள்ளது. நோயில்லாதிருப்பினும், நல்ல பசியையும், ரத்த விருத்தியையும், தாது விருத்தியையும், நல்ல வலுவையும், நரம்புகளின் பலத்தையும், சந்தான விருத்தியையும், திடகாத்திர சரீரத்தையும் பெற விரும்புவோர் இதனையே அமிர்தமாகக்கொண்டு உபயோகிப்பார்களாக. இதற்கு பத்தியத் தாழ்வு செய்யினும் பழுதுபடாதென்றுணர்க. பத்தியமென்று கூறினமையால் உப்பில்லாத புளியில்லாத பத்தியமென்று நினைக்கவேண்டாம். இது, இராஜாக்களுக்கும், மற்றைய தனவந்தர்களுக்கும் உபயோகப்படத்தக்க மகா ஔடதமாதலால் நல்ல சத்துள்ள இஷ்டமான போஜனத்தைப் பசிக்குங் காலங்களிலெல்லாம் உபயோகித்து வரலாம்.

டப்பி 1-க்கு விலை ரூபா 10—8—0.
டப்பி 2-க்கு விலை ரூபா 20—0—0.

மாரி மாரி வரும் நற்சாக்ஷிப் பத்திரங்களைக் கவனிக்கவும்.

எங்கள் நற்சாக்ஷிப் பத்திரக் குறிப்புகளில் சில.

10. காதர் மொஹிதீன் ஸாஹேப், நெ. 43, காமெர்ஷியல் தெரு, பெங்களூர்:— ஸ்திரீகள் ரோகத்தால் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த எனது பந்துக்களும், நண்பர்களும் தங்கள் சுவர்ண ரத்னுகரத்தால் குணமடைந்தார்கள். பின்னும் மருந்துகள் என் கைவசமிருக்கும்படி அனுப்ப வேண்டுகிறேன்.

11. வி. இராமகிருஷ்ணய்யா, (லேட்) துபாஷ், ஒக்ஸ், இஞ்சினீரிங் ஒர்க்ஸ், சென்னை:—வயிற்றுவலியாலும், மூகசர்ம ரோகத்தாலும் மிகக் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த எனது பந்து ஒரு மாதத்தில் தங்கள் சுவர்ண ரத்னுகரத்தால் குணமடைந்தார்.

12. ஏ. சுந்தரம் முதலியார், பெட்டி, பீரோ வியாபாரி, மவுண்ட்ரோட், சென்னை:—கீல் வாதத்தால் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த நான் தங்கள் சுவர்ண ரத்னுகரத்தால் குணமடைந்தேன்.

13. வி சுந்தரேச சாஸ்திரியார், ஜோதிஷ கணித சாஸ்திரியார், ஏகாம்பரேஸ்வர அக்ரஹாரம், சென்னை:—தங்கள் வசமுள்ள மண்டூக மகரிஷிப் புரோக்தமாயுள்ள வைத்திய நூல்களை நான் பார்வையிட்டு அதன்படி அநுஷ்டித்ததில் மிக்க உபகாரமடைந்தேன். தாங்கள் இந்நூலை அச்சிட்டு வெளியிடுவதுடன், சுவர்ண ரத்னுகரம் என்னும் மருந்தின் கியாதியையும் பரவச்செய்ய வேண்டுகிறேன்.

**BASKARA & SONS,**
**Ayurveda Jeevarakshamirtha Pharmacy**
**195, MINT STREET, G. T. MADRAS.**
**Tel-Address. "BHASKARA" MADRAS.**
**Post Box No. 131.**

## GRAND SALE.

விலை ரூபா ஒன்றே.

### சினிமோட்டோ கிராப்.

CINEMATOGRAPH.

இந்த சினிமோட்டோ கிராப்பில் பயாஸ் கோப்பில் காண்பதைப் போல் பல வித மோட்டார் வண்டிகள் ஓடுவதுபோலவும் மனிதர்கள் நடப்பது போலவும் காணலாம். ஆனல் தற்சமயம் இதர கம்பெனியார்கள் இதே சினி மோட்டோ கிராப்பை விலை ரூபா 2 வீதம் விற்பனை செய்கிறார்கள்

16-பலவித படத்துடன் கூடியபெட்டி 1-க்கு ரூபா 1.

ராஸ் வாட்ச் & Co,
நெ. 3. இருளப்பன் தெரு, மதராஸ்

---

பாதாளவாசி
அல்லது
**கோடீஸ்வரனின் துன்பங்கள்.**
நாகை-வி. கோபாலகிருஷ்ணப்பிள்ளை இயற்றியது.

இதிலடங்கிய விஷயங்கள். 1. பயங்கரமான சிறைச்சாலை. 2. காணுமற்போன கன்னிகை 3. அதிசயமான அரண்மனை. 4. பரிதாபகரமான வரலாறு. 5. இரண்டு குடும்பங்கள். 6. பாதாளவாசி பிரசங்கம். 7. பயங்கரமான நரகலோகம்.

விலை அணு 6.

**அமிர்தவல்லி.**
சுவை ததும்பிய இனிய தமிழ் நாவல்
விலை ரூபா 1—0—0.

**கோஹினூர்.**
பண்டிதை விசாலாக்ஷி அம்மாள் இயற்றியது.
ஆரம்பமுதல் அந்தியம்வரையில் வெகு ஸ்வாரஸ்யமாயிருக்கும். விலை அணு 9.

பத்மரேகை
அல்லது
**கற்பகச்சோலை அதிசயம்.**
துப்பறியும் நாவல் விலை ரூபா 1-4-0.

"வனஜாக்ஷி"
இனிய தமிழ் நாவல் அணு 10.

"மூன்று வைரங்கள்"
துப்பறியும் நாவல் அணு 6

தி. இராஜேஸ்வரம் & பிரதர்ஸ்,
ஆலந்தூர், பரங்கிமலை.

---

இரவில் மணிபார்க்கும் ஜெண்டில்மென் அண்டு லேடீஸ் எக்ஸ்பாண்டிங் பிராஸ்லேட் 3-மூலை ரேடியம்,

## ரிஸ்ட் வாட்சு.

இரவில் மணிபார்க்க இக்கடியாரங்கட்கு விளக்கு முதலிய வேறு எவ்வித வெளிச்சமும் தேவையில்லை. இரவில்

GUARANTEED 5 YEARS

இதன் நெம்பர்களும் முள்ளுகளும் நட்சத்திரம் போல்பிரகாசிக்கும். இவை ஒவ்வொன்றும் அழகிய வெல்வெட் பெட்டியில் அமைக்கப்பட்டு இப்போது தான் அமெரிக்காவிலிருந்து அனுப்பப்பட்டன. இதில் அமைக்கப்பட்டிருக்கும் பிராஸ்லெட் என்னும் செயின் ஆனவை ஒவ்வொரு மணிகட்டுக்கும் பிடிக்குமாறு நீளவும் குறுகவும் ஒருவித சமத்காரமான வில் இசையை அமைத்திருப்பதால் இந்த கெடியாரங்களைக் குழந்தைகள்முதல் பெரியவர் வரை கைகளில் கட்டிக்கொள்ளலாம். கெட்டியாய் கைகளில் பிடித்துக் கொள்ளும்.

எக்ஸ்பாண்டின் பிராஸ்லெட் 8-மூலை ரேடியம் வாட்சு 1-க்கு ரூபா 8. மேற்படி ரவுண்டு ரேடியம் கெடியாரம் 1-க்கு ரூபா 7. மேற்படி பொன்கிலிட்டு கெடியாரம் 1-க்கு ரூபா 10.

விலாசம்:—
ஆங்கிலோ - அமெரிக்கன் வாட்சு கம்பெனி,
போஸ்ட்பாக்ஸ், நெ. 366,
மவுண்ட் ரோட், மதராஸ்.

---

ஓம்
மஹானுல் கிடைத்த

## அருமையான மூலிகையும் தாயத்தும்.

குஷ்டம் க்ஷயம் முதல் தீராதென்றெண்ணிய நாள்பட்ட சகலவித வியாதிகளும் பலவித கவலைகளும் உடனே நீங்கும்.

புத்திரபாக்கியமில்லாதவர்களுக்கு 48 நாளில் கெர்ப்பம் உண்டாகும்.

பெண்களுக்கும் குழந்தைகளுக்கும் உண்டாகும் சகலவித வியாதிகளும் பலவித தோஷங்களும் உடனே குணமாகும்.

பிரபலமான பேப்பர்களிலெல்லாம் பார்த்திருப்பீர்கள்.

ஏராளமான நற்சாக்ஷிப்பத்திரங்களைக் காணலாம்.

உலகப்பிரசித்தி பெற்றது.

வெளியூர்களில் ஏஜண்டுகள் தேவை. தக்க கமிஷனும் போனசும் கிடைக்கும். எதற்காகத் தேவையிருந்தாலும் ஆரம்பமுதல் சரிவர விபரமாக எழுதுங்கள். உடனே குணமடைவீர்கள்.

ஒரு அணு (ஸ்டாம்பு) அனுப்பினுல் சகலவித விபரமும் 3 ஞுத்திய புதிய காலண்டரும் அனுபந்தமும் கிடைக்கும். எந்த தேசத்து ஸ்டாம்பும் அனுப்பலாம். கடிதமெழுதுவோர் ஒவ்வொரு கடிதங்களிலும் தங்கள் முழுவிலாசத்தைத் தவறுமல் எழுதி அனுப்பவேண்டியது.

மானேஜர், பாலசந்திரன் ஆபீஸ்,
மேட்டுப்பாளையம், கோயமுத்தூர் ஜில்லா (சவுத் இந்தியா)

---

பெரிய கம்பெனி! பெரிய கம்பெனி!!

### பட்டு பீதாம்பர கம்பெனி, காசி.

சுத்தமான பட்டு! நாணயமான சரக்குகள்!! சகாய விலை!!!

## உயர்தரமான பட்டுபீதாம்பர

### சேலைகள், ரவிக்கைகள்.

துப்பட்டாக்கள், வெண்பட்டு வேஷ்டிகள், அங்க வஸ்திரங்கள், உருமால்கள் முதலிய எல்லாத் தினுசுகளும், சிவப்பு, ரோஸ், ஊதா, பச்சை, மஞ்சள், மேக வர்ணம், வெள்ளை, சிலேட் கலர், ஆரஞ்சு, கத்தரிப்பூக் கலர், கிரிம்சன் முதலிய எல்லா இங்கிலீஷ் கலர்களிலும் மிகவும் சரச விலைக்குக் கிடைக்கும்,

பட்டு பீதாம்பர கேட்லாக் இனும். உடனே எழுதுங்கள்.

Adderss.—Manager, **Silk Pitamber Co.**, Benares City.

விலாசம்.—மானேஜர், பட்டு பீதாம்பர கம்பெனி, ஸ்ரீகாசி.

---

## மணித்தைலம்

பரிமள மிகுந்த வாசனைத்தைலம், சாஸ்திர முறைப்படி காய்ச்சின தைலமாகையால் உபயோகிக்கிறவர்களுக்கெல்லாம் அற்புதமான குணத்தைக் கொடுக்கிறது. சொற்பகாலமாய் வெளிவந்துலாவும் தைலத்தைப்போல் கருதிவிடக்கூடாது. மணித்தைலம் 35 வருஷமாய் விற்பனையாகிவருகிறது. தலைமயிரை உதிராமற்றடுப்பதன்றி மிருதுவாயும் கறுப்பாயும் வளரச்செய்யும் மூளையை குளிரச் செய்கிறது. ஒரு புட்டியின் விலை ரூ. 1.

வைத்திய சாஸ்திரி, மணிசங்கர் கோவிந்தஜி,
ஆதங்க நிக்ரஹ ஔஷதாலயம், 26, பிராட்வே மதராஸ்,

---

பெயருக்கு விலையா? பொருளுக்குப் பணமா

போலி மருந்துகளின் மாய விளம்பரங்களைக்கண்டு மயங்காதீர்கள்.

A DOCTOR IN YOUR POCKET
நவரசம்.

போலி மருந்துகளின் மாய விளம்பரங்களைக் கண்டு மயங்காதீர்கள்

ஓர் அநுபவ குடும்ப சஞ்சீவி

"நவரசம்" அஜீர்ணம், வீக்கம், க்ஷயம், பிளேக், காலரா, இன்புளுயன்சா, தலைவலி, மலச்சிக்கல், பசியின்மை, பலஹீனம், மேக ரோகங்கள், சூதகவலி, இருமல், ஜலதோஷம், பல்வலி, இழுப்பு, காதுவலி, தொண்டைக் கம்மல், வெள்ளை வெட்டை, அறையாப்பு, கைகால் பிடிப்பு, சிரங்கு, சகல ஜுரங்கள் முதலியவைகளை ஆச்சர்யப்படும்படி குணப்படுத்துகிறது; ஆயிரக்கணக்கான குடும்பங்களில் குடும்ப ஔஷதமாகக் கொண்டாடி வருகிறார்கள்; ஆங்கில டாக்டர்களும், ஆயுர்வேத வைத்தியர்களும் குடும்ப ஔஷதமாக உபயோகிக்கும்படி சிபார்சு செய்திருக்கிறார்கள்.

நீங்களும் ஒருமுறை பரீக்ஷித்தால் உண்மையை அறிந்து சந்தோஷிப்பீர்கள். இன்றைக்கே எழுதுங்கள். கேட்லாக் இனும்.

புட்டி **1**-க்கு விலை ரூபா இரண்டு தான். வி. பி. செலவு அணு 5.

சோல் ஏஜண்டு:—

ஆர். கிருஷ்ணு அண்டு கோ.,
**No. 4,** சேலம்.

Printed and Published by T. V. Kalyanasundara Mudaliar at the Sadhu Press, 44-Bazaar Road, Royapettah, Madras.

